# மா சே - துங்

## பாலியமும் வாலிபமும்


மூலம் :

எமி சியோ

மொழியாக்கம் :

முகவை இராஜமாணிக்கம்



புதுமலர் பிரசுரம்

திருவல்லிக்கேணி :: சென்னை-5

# பதிப்புரை

நவசீனத்தின் சிற்பி; புதிய ஜனநாயகத்தின் சிருஷ்டி கர்த்தா; சீனதேசத்தின் ரட்சகர்; சீன தேசீய பண்பாட்டின் பிரதிபிம்பம்; சீனமக்களின் இணையற்ற தலைவர்; மார்க்சிச - லெனினிசத்தின் சிந்தனை தீபத்தை ஏந்தி நிற்கும் ஆசியாவின் மேதையாக விளங்கும் மா சே-துங்கின் பால்ய பருவத்தையும், வாலிபப் பருவத்தையும் படம் பிடித்துக் காட்டும் இந்த அரிய நூலை முதல் வெளியீடாக வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி கொள்ளுகிறோம்.

1893-ல் அவர் பிறந்தது முதல் 1920-ல் அவர் ஷாங்கை வந்தது வரை—அவரது குழந்தைப் பருவ முதல் 27 வயது வரை அவர் வளர்ந்தவிதம், படித்தவிதம், செய்த பணிகள், ஈடுபட்ட இயக்கங்கள் ஆகியன மிக அற்புதமாக விளக்கப்பட்டுள்ளன. சீன சரித்திரத்தின் சிறந்தவற்றுக்கெல்லாம் எடுத்துக் காட்டாக விளங்கும் இணையற்ற மேதையான இவர், சீனமக்களின் மாபெருந் தலைவராகவும், ரட்சகராகவும் எப்படி உருவானார் என்பதை, ஜனநாயக எண்ணமும், தேசபக்தி ஆர்வமும் கொண்ட தமிழ் மக்கள் அனைவரும், குறிப்பாக இளைஞர்கள் எல்லோரும் கற்றுணர்ந்து கொள்ள இந்நூல் பெரிதும் உதவும் என்ற நம்பிக்கையில் இந்நூலை வெளியிட முன் வந்துள்ளோம்.

புதுமலர் பிரசுரத்தார்.

## சமர்ப்பணம்

இந்திய - சீன நல்லுறவில் நாட்டங்கொண்ட சகல
ஜனநாயக எண்ணங்கொண்ட மக்களுக்கும்
இந்நூல் சமர்ப்பணம்.

# பொருளடக்கம்

## அத்தியாயம் I

# ஏகாதிபத்தியம், நிலப்பிரபுத்வம் என்ற இரட்டை நுகத்தடியின்கீழ் சிக்கிய இளம்பருவம்

### 1. சீன விவசாயி மகன்

ஹூனன் மாகாணத்தைச் சேர்ந்த **சியாங்டன்** கவுன்டி* யில் **ஷாவோஷான் சுங்** என்பது ஒரு கிராமம். சுமார் 10 லீ † (சுமார் $3\frac{1}{2}$ மைல்) நீளம் பரவியுள்ளது அந்தக் கிராமம்: மனோகரமான தோற்றமுடைய அந்தக் கிராமத்தைச் சூழ்ந் திருக்கும் குன்றுகளும், நீரோடைகளும், வழிப்போக்கர் களுக்கு மிகவும் ரம்மியமாகக் கண்களிற்படும் தென் சீனு வின் விவரிக்க வொண்ணுத அற்புதக்காட்சி யளித்து நின் றன. அந்தக் கிராமத்தில் அதிக வீடுகள் கிடையாது; அங்கொன்றும் இங்கொன்றுமாக இருக்கும். அங்கு வாழும் விவசாய மக்கள் கஷ்டப்பாடுபடும் பாட்டாளிகள்; ஆனுல் நேர்மை நிறைந்தவர்கள். அதில் ஒரு குடும்பம்தான் **மா** என்பவரது குடும்பம்.

**ஷாவோஷான் சுங்** கிராமத்தில் "தென்மேல் கரை", "தென்கீழ் கரை" என்ற இரண்டு கரைகள் உண்டு. அந்தக் கிராமத்திற்குத் தெற்கேயுள்ள கீழ்கரையோரம் **சியாங்டன்** என்ற ஊருக்கும், அதையடுத்துள்ள சியாங் சியாங் கவுன்ட்டிக்கும் செல்லும் ஒரு ரஸ்தா இருக்கிறது;

---

* County - கவுன்ட்டி என்பது மாகாணத்தின் நிர்வாகத்துக்கு உட்பட்ட ஜில்லா அல்லது தாலுகா போன்றது.

† Li - (லீ) என்பது 3-ல் 1 பங்கு மைலுக்கும் சற்று அதிகம்; சுமார் 633 கஜம்.

மேல்கரையோரம் ஒரு கற்பாலமும் அதைச் சுற்றிச் சில கடைகளும் உள்ளன; அக் கடைகளில் உப்பு, இறைச்சி முதலிய தேவைப் பண்டங்கள் விற்கப்படும். அந்தப் பாலத்தின் கீழே ஒரு நீரோடை **ஷாவோஷான்னைச்** சுற்றி நெளிந்து ஓடுகிறது. இந்த ஓடையருகில் இருபக்கமும் தாழ்வாரமுள்ள ஒரு ஓட்டு வீடு இருந்தது; அதில் **மா, சூ** என்ற இரு குடும்பங்கள் வாழ்ந்து வந்தன; அந்த வீட்டுக் கூடத்தின் நடுமையமாகத்தான் இருகுடும்பத்துக்கும் பொதுவான எல்லைக்கோடு சென்றது; இரு குடும்பமும் ஆளுக்கொரு பகுதியில் வாழ்ந்து வந்தனர்.

1893-ம் ஆண்டு நவம்பர் 19-ம் தேதியன்று சீனமக்க ளின் மாபெரும் தலைவரும், ரட்சகருமான **மா சே-துங்** பிறப்பதற்கு இந்த வீடு பெரும் அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்.

மா சே-துங் தந்தையின் பெயர் **மா ஷுன்-ஷெங்.** அவர் ஒரு ஏழை விவசாயி; கட்டுமஸ்தான உடல்; நீண்ட உரு வம்; முதுமைப் பருவத்தில் அவர் அழகாக வளர்த்துப் பேணிவந்த தாடியுடன் காட்சி யளித்தார். புத்திக் கூர்மையும், சுறுசுறுப்பும் உள்ளவர்; வீட்டுக் காரியங் களைத் திறம்பட கவனிப்பதில் அவருக்கு ஒரு தனி ஆர்வம். தான் பட்ட கடன்களை அடைப்பதற்காக தனது வாலிபத் தில் அவர் ராணுவத்திற் சேர்ந்தார். ராணுவத்திலிருந்து திரும்பி வந்ததும், அவர் ஒரு சிறு வியாபாரம் செய்யத் தொடங்கினர்; அதைக் கொஞ்சம் கொஞ்சமாக அபி விருத்தி செய்து, அதிற்கிடைத்த வருவாயை நிதானமாக வும், ஜாக்கிரதையாகவும் பாதுகாத்து நல்ல நிலையில் வாழ்ந்துவந்தார். ஒரு மத்தியதர விவசாயி என்ற அந்தஸ் துக்கு உயர்ந்தார்; தனக்கு முன்னர் சொந்தமாயிருந்த 15 மோ * (2½ ஏக்கர்) நிலத்தையும் திருப்பி, அதில் அவரே உழுது பயிரிட்டு வந்தார். மாவின் குடும்பத்தில், மா சே-துங் தாத்தா, அப்பா, அம்மா, அவர் (அப்பொழுது அவ ருக்கு 10 வயது), அவர் தம்பி **சே-மின்** ஆகிய ஐவர் உண்டு. அவர் தந்தையின் திறமையான நிர்வாகத்தால் குடும்பம்

* 1 ஏக்கர் - 6 மோ.

செழிப்புற்று வளர்ந்து வந்தது; மேலும் 7 மோ ($1\frac{1}{6}$ ஏக்கர்) நிலம் அவர் குடும்பச் சொத்தில் சேர்ந்தது. இரண்டு வருடத்திற்குப் பிறகு அவர் தாத்தா காலமானர்; ஆனல் **சே-டான்** என்ற தம்பி பிறந்ததால், அவர் குடும்ப எண்ணிக்கை குறையவில்லை. பணம் சேர ஆரம்பித்ததும், அவரது அப்பா தானிய வியாபாரம் செய்வதிலும், பன்றி இறைச்சி வியாபாரம் பண்ணுவதிலும் ஈடுபட்டார். கடைசியாக அவர் ஒரு பணக்கார விவசாயி என்ற அந்தஸ்தை அடைந்தார்.

## 2. ஆறு வயது முதல் அரும்பாடு

ஏகாதிபத்தியம், நிலப்பிரபுத்வம் என்ற இரட்டை நுகத்தடியின் கீழ் சீன மக்கள் சிக்கித்தவித்த காலமானது, சீன சரித்திரத்தில் காரிருள் நிறைந்த ஒரு பயங்கர கால கட்டமாகும்; அந்த சந்தர்ப்பத்தில்தான் மா சே-துங் பிறந்தார்.

மறு நூற்ருண்டு பிறந்ததும், முதலாளித்வ நாடுகள் ஏகாதிபத்திய கட்டத்துக்குள் புகுந்துவிட்டன; விஸ்தரிப்பு, ஆக்கிரமிப்புத் திட்டங்களை அவை தீட்டிக்கொண்டிருந்தன. மா சே-துங் பிறப்பதற்கு 53 ஆண்டுகளுக்கு முன், 1840-ல் அபினி யுத்தம் நடந்தது; அதைத் தொடர்ந்து அந்நிய நாட்டு ஆக்கிரமிப்பு யுத்தங்கள் அடுத்தடுத்து நடைபெற்றன. அதன் விளைவாக சீனவின் அரசுரிமை பறிபோவதற்கு ஆதாரமான ஒன்றன்பின் ஒன்ருக பல அநியாய உடன்படிக்கைகளில் கையெழுத்திடும்படி சீன நிர்ப்பந்திக்கப்பட்டது. பல பிரதேச பகுதிகளும், பல்வேறு செல்வாக்கு மண்டலங்களும் சீனவின் கையிலிருந்து பிடுங்கப்பட்டு ஏகாதிபத்திய நாடுகளால் பங்கு போட்டுக்கொள்ளப்பட்டன. ஐயாயிரம் ஆண்டுதொட்டு உன்னதமான நாகரீகம் படைத்த சீன தேசமானது, படிப்படியாக ஒரு அரைக்காலனி நாடாகத் தேய்ந்து குறைந்து, அந்நிய வல்லரசுகளின் ஆக்கிரமிப்பினல் சின்னபின்னப் பட்டுப்போகும்படியான அபாயத்தை எட்டியது.

அன்றிருந்த மஞ்சூ ஏகாதிபத்திய அரசாங்கத்தில் ஒரே ஊழல் மயம்; சுத்த கையாலாகாத அரசாங்கம் அது. அந்நிய நாடுகளின் மீது அது கொண்டிருந்த கேலிக்கிட மான திமிரும், படாடோபமும் வெகு சீக்கிரத்தில் கொத் தடிமைத்தனமாக மாறியது. அடிமைச் சேவகம் புரிவதில் அதற்கு வெட்கமே தோன்றவில்லை; எந்த நிபந்தனையை யும் ஏற்க அது தயார். ஆனால் உள்நாட்டிலோ ஆக்கிர மிப்பு, சுரண்டல் கொள்கையை தலைகால் தெரியாமல் சர்வாதிகார முறையில் கையாண்டது; அதற்காக மக்க ளின் புரட்சிப் போராட்டங்களை அடக்க முனைந்து அடிக் கடி அந்நிய உதவியை நாடியது. அந்நிய நாட்டுக் கடன் கள், நஷ்ட ஈடுகள் ஆகியவற்றால் ஏற்பட்ட அபார செல வாலும், அதன் நிர்வாக முறையின் ஊழலாலும் இந்த நிலப்பிரபுத்வ அரசாங்கம் மக்களை ஓட்டாண்டிகளாக்க சகலவித ஈனத்தனமான நடவடிக்கைகளையும், வரிகள், தண்டங்கள் விதிப்பதையும் மேற்கொண்டது. சமூகம் நிலைகுலைந்து சிதறும் கட்டம்; மக்களின் துன்பம் பெருகி யது. இந்தக் கொடிய சுரண்டலினால் மிகவும் பாதிக்கப் பட்டவர்கள் விவசாய மக்களே!

வெளி நாடுகளுடன் சீனா வியாபாரம் செய்யத்தொடங் கிய காலமுதற்கொண்டு, இறக்குமதியான சாமான்கள் கிராமப் புறங்களில் ஏராளமாக வந்து குவிந்தன. உள் நாட்டில் நெய்த துணிக்குப் பதிலாக உல்லன், பருத்தி உடைகள் வந்து குவிந்தன. தாவர எண்ணெய்க்குப் பதி லாக மண்ணெண்ணெய்; நெருப்புக் கல்லுக்குப் பதிலாக நெருப்புக்குச்சி; உள்நாட்டு சாயத்திற்குப் பதிலாக வெளி நாட்டு சாயம்; உள்நாட்டு ஆணிக்குப்பதிலாக வெளிநாட்டி லிருந்து வரும் ஆணிகள் போன்றவை வந்து குவிந்தன. நிலைமை மிகமோசமாயிற்று; கிராமப்புறங்களில் உப தொழிலாக இருந்த சீன கைத்தொழில்கள் எல்லாம் அழிந்துபோகும்படியான நிலைமை ஏற்பட்டது. பலவருடங் களாக பெரிய நிலச்சுவான்தார்களும், வட்டிக்குக் கடன் கொடுக்கும் லேவாதேவிக்காரர்களும் நிலங்களைக் கைப் பற்றியதன் விளைவாக பெரும்பாலான விவசாயிகள் நிலத்தை இழந்தனர்; ஒரு சிலருக்கு கையளவு நிலங்கள்

தான் மிஞ்சிற்று. நிலச்சுவான்தார்களிடமிருந்து அதிக மான குத்தகைக்கு நிலத்தை வாங்கி விவசாயம் செய்வதால் அந்த விவசாயிகளின் உழைப்பில் எதுவும் மிஞ்சுவதில்லை. நிலச்சுவான்தார்கள், பணக்கார விவசாயிகள் ஆகியோரிடம் உழைப்பை விற்கும் விவசாயிகள் கூலிகளாக வேலை பார்க்க நேர்ந்தது. இத்தனைக்கும் மேலாகத்தான், ஏகாதிபத்திய ஆக்ரமிப்பும் ஏற்பட்டது; அதனால் மக்களின் வாழ்வு மேலும் சரிந்தது.

அபினி யுத்தம் நடந்து சுமார் 20 ஆண்டுகளுக்குப் பிறகு, சீனாவிலுள்ள ஏகாதிபத்தியவாதிகளின் பல சரக்கு மண்டிகளின் எண்ணிக்கையில் **சியாங்டனும்** சேர்ந்தது. **குவாங்டங்** வழியாக வெளிநாட்டு சரக்குகளைக்கொண்டு வருபவர்கள் சீனாவின் உள்நாட்டிலிருந்து உறிஞ்சுவதற்கான விநியோகதளமாக இதை உபயோகித்தனர்; சீனாவின் ஏற்றுமதிப் பொருள்களான பட்டு, தேயிலைபோன்றவற்றை குவாங்டங்கிலிருந்து கப்பலேற்றுவதற்கு இங்குதான் கட்டுகள் போட்டார்கள். சியாங்டங்-குவாங்டங் இடையே விறுவிறுப்பான வியாபாரம் நடந்தது; இந்த சாமான்களைப் கப்பலேற்றும் தொழிலில் சுமார் ஒரு லட்சம் பேர் ஈடுபட்டிருந்தனர். மா சே-துங் அப்பா வசித்த கிராமத்திலும், அந்நியர் விஸ்தரிப்புக்கொள்கையினால் ஏற்பட்ட விளைவு தென்பட்டது; ஆயினும் அவர் நிலைமையில் மாற்றம் எதுவும் ஏற்படாது பார்த்துக்கொண்டார். விடியவிடியப் பாடுபடும் அவரும், அவரது குடும்பமும் புது உற்சாகம் பெற்றனர். வீட்டுக்குத் தலைவரான அவர் தனது கிராமத்திலிருந்து சியாங்டங், நிங்கியாங், சாங்ஷா போன்ற பெரும் நகரங்களுக்கு தானியம், பன்றி இறைச்சி ஆகியவை ஏற்றுவதில் அதிக நேரத்தையும், கவனத்தையும் செலுத்தினார். அவர்கள் நிலத்தில் முழு நேரம் உழைக்கும் ஒரு விவசாயியும் பாடுபட்டார். விவசாய காலங்களில், நாற்று நடுதல், பரம்படித்தல், அறுவடை செய்தல் போன்ற வேலைகளுக்கு மற்றும் சிலர் வேலைக்கு அமர்த்தப்பட்டார்கள். பல வேலைகளை அவரது மனைவியும், பிள்ளைகளும் பார்த்தனர். இலையுதிர்காலத்தில் அரிசி ஆட்டுவதற்காக ஒரு தொழிலாளி அமர்த்தப்படுவார்.

அப்படிக் காலங்களில் ஏழு பேருக்கு உணவு தயாரிக்க வேண்டும். அவர்கள் உணவில் சிக்கனந்தான்; ஆயினும் எல்லோருக்கும் போதிய உணவு கிடைத்தது.

ஏழு வயது அரும்பா முன்னரே, 'மாசே-துங்' வயலிலே வேலை செய்ய ஆரம்பித்துவிட்டார். 13 வயதில் பெரிய ஆள்மாதிரி வயலில் வேலை செய்ததோடு, மாலை நேரத்தில் தகப்பனுருக்கு கணக்கு வேலையிலும் உதவியாயிருந்தார்; ஏனென்றுல் அந்தக் குடும்பத்தில் அவர்தான் 'ரொம்பப் படித்தவர்.' அதாவது, அவருக்குத்தான் அதிகமான வார்த்தைகள் தெரியும். எண்ணும் பலகையை உபயோகிப் பதையும் அவர் கற்றுக்கொண்டார்; கோடை காலத்து நிலாக்காலங்களில் அவரும் அவரது தம்பியும் ஒரே சமயத்தில் இருகைகளாலும் எண்ணும் அற்புதக் கலையை தங்கள் தந்தையிடமிருந்து கற்றுக் கொள்ளுவார்கள். ஆனுல், தாயும், குழந்தைகளும் தீட்டாத அரிசியும், காய்கறிகளும்தான் சாப்பிடுவார்கள்; சந்திர கணித பஞ்சாங்கப்படி சந்திரனது முதல் பிறையன்றும் பௌர்ணமியன்றும் அவர்களிடம் வேலை செய்பவர்களுக்கு முட்டையும், மீனும் கொடுப்பார்கள்; இன்னும் சில விசேஷ நாட்களில் இறைச்சிகூடக் கொடுப்பார்கள்; ஆனுல் குடும்பத்தார்களுக்கு எப்போதும் போன்ற உணவுதான் கிடைக்கும்.

இந்த கிராமப்புற சூழ்நிலையும், இளமையிலிருந்தே உடல் உழைப்பும் மா சே-துங்குக்கு ஏற்பட்டதால், சீனுவிலுள்ள விரிந்த விவசாயப் பகுதி மக்களின் துயரங்களும் தேவைகளும் அவருக்குத் தெளிவாகப் புரியலாயிற்று. அவரோ ஒரு விவசாயி மகன்; அவர் வாழ்ந்த சூழ்நிலையும், வளர்ந்த முறையும் இளமை தொட்டே விவசாய மக்களின் தொடர்பு அவருக்கு ஏற்பட வாய்ப்பு அளித்தது.

## 3. யோக்கியமான சிறுவன்

மா சே-துங் அம்மாவின் குடும்பப் பெயர் **வென்**; சியாங் சியாங் ஜில்லாவைச் சேர்ந்த **டாங்சியாடுவோவில்** பிறந்தவர். நடுத்தர உருவம்; சதுர முகம்; சின்ன கண்

கள்; பல நற்குணங்கள் வாய்ந்த பெண்மணி. ஏழைகள் மீது இரக்கமுடையவர்; உதவும் மனம் படைத்தவர்; சுபிட்சமில்லாத வருடங்களிலும், அல்லது பஞ்ச காலங்களிலும் தனது கணவனுக்குத் தெரியாமல் பட்டினி கிடப்பவர்களுக்கும், ஏழைகளுக்கும் அரிசி போடும் வழக்கத்தைக் கொண்டிருந்தார். ஒரு நல்ல பெண்மணி என்றும் அவள் பெயரெடுத்துவிட்டாள். மா குடும்பம் வளமாயிருந்ததற்கு, திருவாளர் மாவின் வியாபார முயற்சிகள் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் திருமதி மாவின் குடும்ப நிர்வாகமுமாகும். ஒரு விவசாயப் பெண்மணி செய்ய வேண்டிய கடமைகளான—குழந்தைகள் வளர்ப்பு, சமையல், விறகு சேகரித்தல், நூற்பது, கிழிசல் தைப்பது, துணி துவைப்பது, தேய்ப்பது ஆகியவற்றை இந்த அம்மையும் செய்வாள்.

தாய்மீது மா சே-துங்குக்கு அளவற்ற பாசம்; கடைசி வரை தாய்க்குக் கட்டுப்பட்டு நடக்கும் ஆசை மகனாக அவர் இருந்தார். தாயிடமிருந்த பல நற்குணங்களும், அவரது பின் வாழ்க்கைக்கு ஆதர்சமாக விளங்கின,

கிராமப்புறங்களில் சர்வ சாதாரணமாகக் காதில் விழும் கதைகளில் சிலவற்றைக் கீழே பாருங்கள்:

★ ஒரு வருடம், அறுவடைக் காலத்தின்போது திடீரென்று மழைபிடித்துக் கொண்டது; கதிர்களை வெயிலில் விவசாயிகள் உலர வைத்துக் கொண்டிருந்த தருணம் அது. சிறு பிள்ளையான மா சே-துங், தன் குடும்பத்தின் கதிர்களைப் பொறுக்குவதற்கு முன்பு அவசரம்அவசரமாக ஒரு குத்தகை விவசாயி குடும்பத்தின் கதிர்களைப் பொறுக்குவதில் உதவி புரிந்தார். இதைக் கண்ட அவரது தந்தை ஆத்திரமடைந்தார்; அதற்கு 'மா சே-துங்' அளித்த பதில்:

"அவர்களது குடும்பம் ஏழைக் குடும்பம்; குத்தகைப் பணமும் அவர்கள் செலுத்த வேண்டும். சிறு நஷ்டம் ஏற்பட்டாலும் அது அவர்களைப் பெரிதும் பாதிக்கும். நமது கதிர்களுக்கு நஷ்டமேற்பட்டாலும் அது அவ்வளவு நம்மைப் பாதிக்காது அல்லவா..."

★ குளிர் காலம் ஒன்றில் ஒருநாள் அவர் பள்ளிக்குப் போகும் வழியில் ஒரு வீட்டுக்குள் ஓடினார்; அங்கு ஒரு ஏழை வாலிபன் உடல் முழுவதையும் மறைக்க உடையின்றி கொட்டும்பனியில் நடுங்கிக் கொண்டிருந்தான். அவனோடு மா சே-துங் சிறிது நேரம் பேசிவிட்டு, தனது நேர்த்தியான மேல் சட்டையைக் கழற்றி, தான் முன்பின் அறியாத அந்த வாலிபன்மீது அணிந்தார். பிறகு விடு முறைக்கு அவர் வீடு சென்றபோது அவரது பெட்டியில் அந்த மேல் சட்டை இல்லையென்பதை வீட்டார் கண்டனர்; அதைப்பற்றி அவரிடம் விளக்கம் கேட்கப்பட்டது.

★ ஒரு சீனப் புது வருடத்தின்போது, கடனுக்கு ஒரு காட்டுப் பன்றியை வாங்கியவர் வீட்டுக்குப்போய், அதன் தொகையை வாங்கி வரும்படி அவரை, மா சே-துங் அப்பா அனுப்பினார். பணத்தை வாங்கிக் கொண்டு திரும்பும் வழியில் கந்தல் உடையுடன் பரிதாபமாக நின்ற ஏழை மக்கள் கோஷ்டி ஒன்றை அவர் கண்டார். உடனே அவரிடம் இருந்த பணம் அவ்வளவையும் அவர்களிடம் கொடுத்துவிட்டார்.

★ ஒரு நாள், அவரும் அவரது தம்பியும், தந்தையின் உத்தரவுப்படி மொச்சைக்காய் பொறுக்க வயலுக்குச் சென்றனர், தம்பி துடுக்கான பிள்ளையாதலால், மொச்சைக்காய்ச் செடிகள் அதிகமில்லாத இடத்தைப் பொறுக்கி யெடுத்தான். அங்கு மொச்சைக்காய் பறிப்பது சுலபம்; சொற்ப நேரத்தில் பெரும் விஸ்தீரணத்தில் பொறுக்கி விடலாம். ஆனால் மொச்சைச் செடிகள் அடர்த்தியாக இருந்த பிரதேசத்தை மா சே-துங் பொறுக்கி யெடுத்து உண்மையிலேயே கஷ்டப்பட்டு மொச்சைக்காய்களைப் பொறுக்கி யெடுத்தார். அதிக நேரம் மொச்சைக்காய்களைப் பறித்தார், அதிகமான இடத்துக்குச் செல்லாமல். அங்கு வந்த அவருடைய அப்பா, சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு தம்பியை மெச்சினார்; அண்ணனைத் திட்டினார். கூடையைக் கவிழ்த்து எவ்வளவு மொச்சை பொறுக்கப்பட்டது என்பதை அண்ணன் காட்டினார். மா சே-துங் அப்பா வாயடைத்துப் போனார் அதைப் பார்த்ததும்.

★ மா என்ற அதே பெயர் கொண்ட அண்டை வீட்டுக்காரர், 'மா சே-துங்' அப்பாவிடம் ஒரு நாள் ஒரு பன்றியை விற்ருர். விலையைத் தீர்த்து உடனே தொகை கட்டப்பட்டது; ஆனால் உடனே பன்றியை அவர் அப்பா கொண்டு போகவில்லை. 15 நாட்கள் கழிந்தன; பன்றியின் விலைவாசியும் ஏறிவிட்டது. பன்றியைப் பிடித்துக்கொண்டு வரும்படி மா சே-துங்கை அனுப்பினுர் அவர் அப்பா. அவர் அங்கு சென்றதும், அண்டை வீட்டுக்காரர் பன்றியைக் கொடுக்க ஆட்சேபித்தார். "பன்றி இறைச்சியின் விலைவாசி ஏறிவிட்டது தெரியாதா? இத்தனை நாட்கள் அதற்கு இரை போட்டிருக்கிறேன்; அதை நான் விற்கப் போவதில்லை" என்ருர்.

"அது சரிதானே, 10 நாட்களுக்கு மேலாக அதற்கு நீர் இரை போட்டிருக்கிறீர். அதனுல் பழைய விலைக்கே அதை விற்க நீர் ஒப்பமாட்டீர். நீர் சொல்வது எனக்குப் புரிகிறது" என்ருர் சொல்லிவிட்டு வெறுங்கையுடன் அவர் வீடு திரும்பினுர்.

இம்மாதிரிக் கதைகளை ஏராளமாக **ஷாவோஷான் சுங்** வாசிகளின் வாயிலிருந்து கேட்கலாம். மா சே-துங் குணுதிசயத்தைப் புரிந்துகொள்ள இவை பெரிதும் உதவுகின்றன. பாலிய முதற்கொண்டே அவர் யோக்கியமாகவும் எளிமையாகவும், நேர்மை நிறைந்தவராகவும் இருந்து வந்திருக்கின்ருர்.

## 4. பாலியத்திலேயே படிப்பில் அக்கறை

மா சே-துங், 8-வது வயதில் படிக்கத் தொடங்கி, 13-வது வயதோடு பள்ளியைவிட்டு விலகினுர். அவர் படித்த பள்ளிகளில் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட இதிகாசங்கள் உயிரில்லாமலிருந்ததால் பிள்ளைகளுக்கு அவை உற்சாகமூட்டவில்லை. போதனு முறையோ—மனப்பாடம் செய்வதும், ஒப்பிப்பதும் தவிர வேறு எதுவும் கிடையாது. விளக்கம் கூறுவது அவசியம்

என்று ஆசிரியர்கள் கருதுவதில்லே; சில விஷயங்கள் ஒன்றுமே விளங்காமல் குழப்பமடையும் பிள்ளேகளுக்கு, "புரியவைக்க வேண்டுமே" என்று சில வாத்தியார்களுக் தான் படும்; மற்றும் சிலர் ஏதோ கொஞ்சம் விளக்கம் சொல்வார்கள். இம்மாதிரி "மனப்பாடம்" செய்வதை மா சே-துங் ஆதிமுதல் எதிர்ப்பவர். **விஸ்வாசமுள்ள வீரன் யுபே பே, டாங் வமிசத்தின் கதைகள், மேல் நாடுகளுக்கு யாத்திரை, தெய்வப் பிறவிகள்** போன்ற பிரபல கற்பனேக் கதைகளும், அதன்பிறகு வெளிவந்த **தண்ணீர் ஓரம், மூன்று ராஜ்யங்கள்** ஆகிய கதைகளும் அவருக்கு மிகவும்பிடித்தம். கற்பனேக் கதைகள் பிடிப்பதுபோல, இதிகாசங்களேயும் அவர் படிப் பார்; அவரது அபார ஞாபகசக்தியால் எந்தப் பகுதியை யும் அப்படியே ஒப்பிப்பார். அவர் படித்த நவீனங்களின் சம்பவங்களும், அதில் வரும் பாத்திரங்களும் அவருக்கு அப்படியே ஞபகம் இருக்கும்; குழந்தையாக இருக்கும் போதே கதை சொல்வதில் அவருக்குப் பாண்டித்தியம் அதிகம். அவர் இளமையில் படித்தவற்ருல், அவரது பின் வாழ்க்கைக்குப் பெரிதும் பிரயோஜனமாயிருந்தது.

தமது 13-வது வயதில் தனிப்பட்ட பள்ளியைவிட்டு விலகி மீண்டும் விவசாய வேலேக்கு அவர் திரும்பினர். சதாசர்வகாலமும் அவருக்கு வேலேதான்; பகலில் வயலில் வேலேபார்ப்பார்; இரவில் தகப்பனருக்கு கணக்கு வேலே யில் உதவிபுரிவார். இந்த வேலேகளால் அவருக்கு அலுப் புத் தோன்றினலும், அவர் படிப்பதை நிறுத்துவதில்லே. கணக்குப் பார்க்கும்பொழுது அவர் கைக்குக் கிடைக்கும் எந்தப் புத்தகமானலும் படிக்கத் தவறமாட்டார். இதைக் கண்டு அவர் அப்பா கோபப்படுவார். இதிகாசங்களே அவர் வாசிக்காமல் விளக்கை எரித்துக்கொண்டு வேறு ஏதாவது படிப்பது எண்ணெய்க்குக்கேடு என்பது அவர் அப்பா அபிப்பிராயம்! அவரது ஜன்னலில் ஒரு நீலத்திரையை மா சே-துங் தொங்கவிடுவார்; வெளியே இருந்து பார்ப் பவர்களுக்கு உள்ளே எரியும் விளக்கு தெரியக்கூடாதாம். தாவர எண்ணெயில் எரியும் விளக்கானதால் வெளிச்சம் மங்கலாகத்தானிருக்கும்; அதுவும் மொச்சைக்கொட்டை அளவுதான் அதன் சுடர் இருக்கும். அவரது சின்ன அழுக்

கடைந்த அறையிலிருந்துகொண்டு ஏராளமான புத்தகங்களை ஆர்வத்துடன் அவர் படிப்பார்.

## 5. நாட்டு நடப்புகளில் முதல் பரிச்சியம்

அந்நியநாட்டு முதலாளித்வத்தின் ஊடுருவலால், மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக நிலவிவரும் சீனநிலப்பிரபுத்வ சமூகத்தில் ஒரு முக்கியமான தீவிரமாற்றம் ஏற்பட ஆரம்பித்தது. அதன் விளைவாக, ஒரு அரை-நிலப்பிரபுத்வ சமூகம் பிறந்தது. மா சே-துங் எழுதியதாவது:

"...இந்த விளைவை அந்நிய நாட்டு முதலாளித்வப் படையெடுப்பு துரிதப்படுத்தியது. சீன சமூகப் பொருளாதாரத்தைச் சீர்குலைப்பதில் அந்நிய முதலாளித்வம் முக்கியமான பங்கு வகித்தது; சீனுவின் சுய-தேவைக்குப் போதுமான தேசியப் பொருளாதாரத்தையும், அதன் சிறு கைத்தொழில்களையும் நகரங்களிலும், கிராமப் புறங்களிலும் சீர்குலைத்தது; அதே பொழுதில் நகரங்களிலும், கிராமப் பகுதிகளிலும் பண்ட உற்பத்திப் பொருளாதார அபிவிருத்தியைத் துரிதப்படுத்தியது......

"சீன நிலப்பிரபுத்வ பொருளாதர அடிப்படையைக் குலைக்கும் காரியத்தைச் செய்ததோடு மட்டுமல்லாமல், இவற்றின் விளைவுகளாக, சீன முதலாளித்வ உற்பத்தியில் அபிவிருத்தி ஏற்படுவதற்கான சில புறநிலைமைகளும், சாத்தியதைகளும் உண்டாயின......

"அதாவது, 60 ஆண்டுகளுக்கு முன், 19-வது நூற்றுண்டின் பிற்பகுதியில், அந்நிய முதலாளித்வத்தின் தூண்டுதலினுலும், நிலப்பிரபுத்வ பொருளாதார அமைப்பில் ஏற்பட்ட சில வெடிப்புகளாலும், சில வியாபாரிகளும், நிலச்சுவான்தார்களும், அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்தவர்களும் நவீன தொழில்களில் முதல் போட ஆரம்பித்தார்கள். 40 வருடங்களுக்கு முன்னுல், புதிய நூற்றுண்டு

பிறந்தது தொட்டு சீன தேசீய முதலாளித்வம் முளைவிட்டு அரும்பி வளர ஆரம்பித்தது."

(மா சே-துங் எழுதிய சீனப் புரட்சியும் சீன கம்யூனிஸ்ட் கட்சியும் என்ற நூலிலிருந்து)

படித்த முற்போக்கு வாதிகள் எனப்படுவோர், முதலாளித்வ சீர்திருத்தங்களில் முனைய ஆரம்பித்தனர். 1898-ல் "சர்க்காரை சீர்திருத்தி நவீனமயமாக்குக" என்று தொடங்கப்பட்ட பிரசித்தமான இயக்கம் பிறந்த போது, மா சே-துங் 5 வயதுக் குழந்தை. அதன் விளைவாக ஏற்பட்ட ஆட்சி, 100 நாள் உயிரோடிருந்து பின்னர் தோற்று மடிந்தது.

"சுபிட்சமான யுகத்தில் எச்சரிக்கை" என்ற கிண்டலான தலைப்பைக் கொண்ட ஒரு புத்தகம், சீர்திருத்தவாதிகளில் ஒருவரான செங்குவான்-யிங் என்பவரால் எழுதப்பட்டு, 1894-ல் நடந்த சீன-ஜப்பான் யுத்தத்திற்கு முன் வெளியிடப்பட்டது. வெளிவந்ததும், படிப்பில் அக்கரை கொண்ட மா சே-துங் கையில் அது கிடைத்தது. சட்ட சபை முறையின் மூலமாகவும், சட்டரீதியான மன்னராட்சியின் அடிப்படையில் எப்படி முழுச்சீர்திருத்தம் செய்வது என்று அந்த ஆசிரியர் அதில் எடுத்துக்காட்டியிருந்தார். இதுவும், அதே காலத்தில் இருந்த படித்த முற்போக்கு வாதிகளெனப்படுவோர் வெளியிட்ட கருத்துக்களும் சேர்ந்து, சீன-ஜப்பான் யுத்தத்திற்குப்பிறகு ஏற்பட்ட சீர்திருத்த இயக்கத்திற்குப் பெரிய செல்வாக்கை ஏற்படுத்தின. போதிய நவீன இயந்திரங்கள் இல்லாததால் சீனாவின் தொழில்கள் பிற்பட்ட நிலையில் இருப்பதும், அதனால் சீனா மெலிவுற்றிருக்கிறது என்ற ஒரே முடிவுக்கும் அவர்கள் வந்தார்கள். ஆகவே ரயில்பாதைகள், நீராவிக்கப்பல்கள், தந்தி, டெலிபோன் முதலிய வேலைகள் துரிதமாக சீனாவில் நடைபெற வேண்டுமென்ற முடிவுக்கு வந்தார்கள்.

மா சே-துங்கை இது ஆகர்ஷித்தது. "நான்கு நூல்கள்", "ஐந்து இதிகாசங்கள்" என்பதைவிட அனுபவத்தை எடுத்துக் கூறும் புத்தகம் இது; இந்தப் புத்தகம்,

மேலும் மேலும் படிக்க வேண்டுமென்ற அவரது ஆவலைத் தூண்டியது. அவர் வீட்டை விட்டு வெளியேறி, "புது முறையான கல்விமான்" ஒருவரிடத்தில் (சட்ட மாணவர்) முதலில் தங்கி 6 மாத காலம் படித்தார். அத்துடன் பழைய முறையில் பயின்ற கல்விமானுன மா லூ-சுங் என்பவரிடத்தில் வேறு சில இதிகாசங்களும் படித்தார்; அதோடு தானுகவே நடப்பு விஷயங்கள் பற்றிய பல கட்டுரைகளையும், சில புதிய புத்தகங்களையும் அவர் படித்தார்.

## 6. ஒடுக்கப்பட்ட மக்கள், ஏழை விவசாயிகள் மீது இளமை தொட்டே அநுதாபம்

ஆயினும், பழைய நவீனங்களைப் படிக்கும் வழக்கத்தை மா சே-துங் கைவிட வில்லை. ஆளும் வர்க்கங்களின் அடக்கு முறையை எதிர்த்து நடந்த கிளர்ச்சிகள், கலகங்கள் பற்றிய நவீனங்கள்தான் அவருக்கு ரொம்பப் பிடித்தம். ஒரு நாள் திடீரென்று ஒரு கேள்வி அவர் மனதில் உதித்தது. அரசர்கள், தளபதிகள், மந்திரிகள், ரிஷிகள், வீரர்கள் மட்டுமே நவீனங்களில் பிரதானமாக வர்ணிக்கப்பட்டிருப்பது ஏன்? ஆனுல் அவருக்கு மிகவும் அறிமுகமான விவசாயிகளைப்பற்றி ஏன் அந்தப் புத்தகங்களில் வர்ணிக்கப்படவில்லை? இது, நீண்டநாளாக அவருக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று. பிறகு, அதற்கு பதிலை அவர் கண்டுபிடித்தார்: பழைய நவீனங்களில் வரும் கதாநாயகர்கள் அநேகமாக ஆட்சியாளர்கள், அடக்கி ஒடுக்குவோர்கள், சுரண்டுபவர்களாகத்தானிருப்பார்கள்; ஆனுல் அவர்கள் அவற்றை உழுது பயிரிடுவதில்லை; விவசாயிகளைக் கூலிக்கமர்த்தி தங்களுக்காக அவர்களை வேலை வாங்குவார்கள்.

இது ஒரு குறிப்பிடத்தக்க கேள்வி; அதைத் தொடர்ந்து ஒரு குறிப்பிடத்தக்க கண்டு பிடிப்பும் செய்தார். பழைய நவீனங்களைப் படிக்கும் லட்சோப லட்சம் வாசகர்களில் எத்தனை பேர் இம்மாதிரி ஒரு பிரச்சினையுள்ளதென்பதை நினைத்துப் பார்த்திருப்பார்கள்? மா சே

துங் இதைப்பற்றி எண்ணினூர்; அந்தப் பிரச்சினையில் இறங்கி சிந்தித்தார். விரிந்த தொகுதியினரான பாட்டாளி மக்கள் மீது இடைவிடாத அக்கறை கொண்டிருந்தார் அவர் என்பதை இது காட்டுகிறது; இதரர்கள் லேசாக நினைத்த பிரச்சினைகள், சம்பவங்களைப்பற்றி இவர் இளமை தொட்டே எவ்வளவு ஆழமாக சிந்தித்தார் என்பதையும் அது எடுத்துக் காட்டுகிறது.

அந்நிய ஆக்கிரமிப்பு வலுக்க வலுக்க, சீனமக்களின் அரசியல் உணர்வும் உயர்ந்தது. ஹான் (பெரும்பான்மையான) மக்களையும், இதர தேசீய சிறுபான்மையினர்களையும் அடக்கி ஒடுக்கிய அந்நியர் கொடுமைகளையும், லஞ்ச ஊழல் மலிந்த நிலப்பிரபுத்வ மஞ்சூ சர்க்காரையும் எதிர்த்து எண்ணற்ற வீரப் போராட்டங்கள் நடந்தன. மா சே-துங் பிறப்பதற்கு 43 வருடங்களுக்குமுன், விவசாயப் புரட்சிகளிலேயே மிகப்பெரிய **டைப்பிங்** புரட்சி 1850-ல் வெடித்தது. 15 வருடகாலம் அந்தப் புரட்சி நடந்தது; அது கடைசியில் தோல்வியுற்றபோதிலும், சீனமக்களிடையே அது ஒரு பெரிய உணர்வைக் கிளறி விட்டுவிட்டது.

'டைப்பிங்' புரட்சியைப் பற்றிய கதைகள், மா சே-துங் பாட்டனூர் காலத்தைச் சேர்ந்த வயதான மக்களிடையே சர்வசாதாரணமாக பேசப்பட்டு வந்தன. இந்தப் புரட்சி, ஹூனூன் மாகாணத்தைச் சேர்ந்த 'ஸியாங்ஸியாங்கில்' பிறந்த ஒண்ணும் நம்பர் துரோகியும், கொலைகாரனுமான சென் கு-பான் என்பவனின் குயுக்திகளால்தான் பெரிதும் தகர்ந்தது, புரட்சியைச் சீர்குலைத்து முறியடிக்க வேண்டுமென்பதற்காகவே **ஸியாங்** (ஹூனூன்) படையைத் திரட்டினூன் **சென்**; திரட்டி, தனது சொந்த ஜனங்களில் பலரைக் கொலைசெய்தான். இந்த சம்பவம் ஹூனூன் மக்கள் மனதில் ஆழமாகப்பதிந்தது.

'டைப்பிங்' புரட்சி தோற்றதையடுத்து இயற்கையாகவும் மற்றும் வழிகளாலும் ஏற்பட்ட பேரழிவுகள், கஷ்டங்களுக்கிடையேயும் சீன விவசாயிகள் தங்களது போராட்டத்தை விடாமல் நடத்திவந்தனர்.

ஒருமுறை, பெரிய பஞ்சம் ஏற்பட்டபோது, மா சே-துங்கும், சிறுவர்கள் கூட்டம் ஒன்றும் பள்ளிக்கூடத்திற்கு வெளியே விளையாடிக்கொண்டிருந்தனர்; அப்பொழுது, சாங்ஷா விலிருந்து புறப்பட்டு வந்திருந்த பல அரிசி வியாபாரிகளை அவர்கள் கண்டனர். அந்தப் பெரிய நகரத்திலிருந்து ஏன் ஓடிவந்துவிட்டனர் என்று அவர்களை அந்தச் சிறுவர்கள் கேட்டனர். அங்கு கலவரங்கள் நடப்பதால் அங்கிருந்து வந்துவிட்டதாக அந்த அரிசி வியாபாரிகள் பதில் கூறினர். சாங்ஷாவில் பஞ்சத்தால் ஆயிரக்கணக்கான மக்கள் ஏற்கனவே பலியாகி விட்டனர்; பட்டினியால் வாடும் அகதிகள் சார்பில் கவர்னரைக்கண்டு நிவாரணம் கேட்க ஒரு பிரதிநிதி அனுப்பப்பட்டார். "ஏன் உங்களுக்கு சாப்பிட ஒன்றுமில்லை? நகரத்தில் அரிசி ஏராளமாக இருக்கிறதே. என்னைப்பாருங்கள், நான் சாப்பிட எனக்கு ஏராளமாக எப்பொழுதும் கிடைக்கிறதே!" என்று கவர்னர் பதிலளித்தார். இந்தப் பதில் அகதிகளை ஆத்திர மூட்டியது; அதனால் ஒரு கலகம்மூண்டது. சர்க்கார் காரியாலயத்துக்குள் மக்கள் புகுந்து, வாசலிலிருந்த கொடிமரத்தை உடைத்தெறிந்து கவர்னரையும் வெளியே துரத்தியடித்தார்கள். கடைசியாக சுவாங் கெங்-லியாங் என்ற ஒரு பொறுப்பு வாய்ந்த அதிகாரி குதிரைமேலேறிவந்து, சர்க்கார் நிவாரணத்திற்கு ஏற்பாடு செய்து வருவதாக மக்களுக்குச் சமாதானம் கூறினர். அதற்குப் பிறகுதான் மக்கள் கலைந்து சென்றார்கள். அதற்குப்பிறகு, "கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்டார்" என்று சுவாங் மீது குற்றஞ்சாட்டி, மஞ்சு சக்கரவர்த்தி அவரை பதவியிலிருந்து நீக்கினர்; நீக்கிவிட்டு, ஒரு புதியகவர்னரை அங்கு அனுப்பினர்; அந்த கவர்னர், கிளர்ச்சியில் கலந்து கொண்ட சகல தலைவர்களையும் உடனடியாகக் கைது செய்து, அதில் பலரை சிரச்சேதமும் செய்தார்.

இந்த சம்பவம் பள்ளி மாணவர்களிடையே பரவியது. கலகக்காரர்கள்மீது பல மாணவர்கள் அநுதாபங்கொண்டனர்; ஆனல் இந்த அநுதாபம் ஏதோ வேடிக்கையாக, ஏனோதானோவென்று ஏற்பட்டதாகும். 'மாசே-துங்' மனதில் இந்த சம்பவம் ஆழமாக வேரூன்றியது. அந்த இளம்

வயதிலும், சீனமக்களின் எதிர்காலத் தலைவரான அவர், கலகக்காரர்களின் நோக்கத்தைப்பற்றி அநுதாபம் கொண்டார்; ஏனென்றால் அந்தக் கலகக்காரர்கள், அவர் கிராமத்திலுள்ள மக்களைப் போலநேர்மை படைத்தவர்கள் என்பதையும், பட்டினிகிடக்க மறுக்கும் பாமர மக்கள் என்பதையும் அவர் அறிவார். ஆட்சியாளரின் ஈவிரக்கமற்ற அலட்சியப் போக்கை மாசே-துங் கண்டித்தார்; இந்த சம்பவம் தனது பிற்காலவாழ்வில் எத்தகைய குறிப்பிடத்தக்க உணர்ச்சியைக் கிளப்பியது என்று அவரே ஒரு முறை கூறினார்.

மற்றுமொருதடவை, அவர் கிராமத்திலுள்ள **கேலா ஹுய்** (விவசாயிகள் ரகசிய சங்கம்) அங்கத்தினர் ஒருவர் ஒரு நிலச்சுவான்தாருடன் கைகலந்தார், அந்த விவசாயி மீது வழக்குத் தொடர்ந்தார் அந்த நிலச்சுவான்தார்; பணத்தையும், அதிகாரத்தையும் கொண்டு நிலச்சுவான்தார் வழக்கில் ஜெயித்தார். இந்தத் தீர்ப்பு அநீதம் என்று 'கேலா ஹுய்' கருதியதால் அதற்கு ஆட்சேபம் தெரிவிக்கும் முறையில், அந்த கிராம மக்கள் அனைவரும் மலைக்கு ஓடி அங்கு போருக்குத் தயாராக அணிவகுத்து நின்றார்கள். அவர்களைத் தாக்க சர்க்காரின் சிப்பாய்கள் அங்கு அனுப்பப்பட்டனர். உண்மையில் ஒரு ஆயுதந் தாங்கிய கலகம் செய்ய 'கேலா ஹுய்' தயாரிப்புகள் செய்து வருவதாகவும், தங்கள் கொடிக்கு "ரத்தப்பலியாக" ஒரு குழந்தையைக் கூட காவு கொடுத்துவிட்டார்கள் என்ற வதந்தியை நிலச்சுவான்தார் கிளப்பிவிட்டார். ஆனால் "கலகம்" அடக்கப்பட்டது. அதற்குத் தலைவனான ஒரு கொல்லர், தப்பித்துச் சென்றுவிட்டார்; ஆனால் பின்னர் அவரைப் பிடித்து சிரச்சேதம் செய்துவிட்டனர். இந்த வெற்றிபெறாத முயற்சியை மாசே-துங் வெகுவாகப் பாராட்டினார்; கொல்லரும் அவரது இளம் நண்பர்களும் வீரத்தியாகிகளென்று போற்றப்பட்டனர்.

அதற்கு அடுத்த ஆண்டில், அறுவடை ஆரம்பகாலத்தின்போது, கிராமப்புறங்களில் அரிசித்தட்டுப்பாடு ஏற்பட்டது. ஏழைகள் பட்டினிகிடந்து அவதிப்பட்டனர்; பணக்காரர்களோ, ஏராளமாக தானியங்களைக் குவித்து

வைத்துக்கொண்டு அகாத விலே கொடுத்தாலொழிய விற்க முடியாது என்று மறுத்தனர். அதனால், "பெரிய வீடுகளில் போய் சாப்பிடுவது" என்ற இயக்கத்தை கிராமவாசிகள் தொடங்கினர். நூற்றுக்கணக்கில் பட்டினிகிடக்கும் ஆண், பெண், இளேஞர், முதியவர் அனேவரும் ஒரு பணக்கார விட்டில் திடுதிப்பென்று நுழைவார்கள்; அவனது களஞ்சியத்தைத் திறந்து தானியத்தை வெளியே எடுப்பார்கள்; அங்கேயே அதைக் குத்தி, அந்தப் பணக்காரனின் பெரிய அண்டாவிலேயே சமைத்துச் சாப்பிடுவார்கள். இதே மாதிரி இதர பெரிய வீடுகளிலும் அவர்கள் செய்தார்கள்.

இளம் மா சே-துங்கின் இதயத்தில் இந்த சம்பவங்கள் அப்படியே பதிந்துவிட்டன. விவசாயிகள் படும் வேதனே அவரை மிகவும் வாட்டியது. பொதுஜன இயக்கங்கள்மீது அவருக்கு அளவுகடந்த அனுதாபம்வளர்ந்ததோடு, அந்த இயக்கங்கள் எவ்வளவு பெரிய வலிமைக்கு மூலாதாரம் என்பதைப் பார்க்கும் நுண்ணறிவு அவருக்கு இருந்தது. அதே சமயத்தில், ஆளும் வர்க்கங்களே எதிர்த்தும், மக்களே ஏமாற்ற அவர்கள் எழுப்பும் மூடத்தனமான சிலேகளே எதிர்த்தும் கிளர்ச்சி செய்யவேண்டுமென்ற எண்ணங்கள் அவர் மனதில் வேரூன்ற ஆரம்பித்தன. விரிந்த விவசாயப் பகுதி மக்களான அடக்கி ஒடுக்கப்படுபவர்கள் பக்கந்தான் அவர் அநுதாபம் என்றும் இருந்தது.

## 7. திடச்சித்தம் படைத்தவர்

மா சே-துங் தந்தை மிகக் கெடுபிடியுடன் குடும்பத்தை நடத்தி வந்தார். ஒரு காரணமுமில்லாமல் தன் மக்களே சோம்பேறிகள், மரியாதை கெட்டவர்கள் என்று அடிக்கடி ஏசுவார். இதை மா சே-துங் அடிக்கடி எதிர்ப்பார். தனது சொந்த உரிமைகளேப் பாதுகாக்க அவர் பகிரங்கமாக எதிர்க்க முற்படும்போதுதான் அவர் அப்பா "தணிந்து போவார்" என்பதை அவர் அநுபவத்தின் மூலம் அறிந்து கொண்டார். ஆனல், அவர் கோழைத்தனமாகக் கெஞ்ச முற்படும்போதெல்லாம் அவருக்கு அடியும் ஏச்சும்

தான் கிடைக்கும். ஆகவே எதிர்த்துக் "கிளர்ச்சி" செய்வதன் மூலம் தன்னை "தற்காத்துக் கொள்ளும்" முறையை அவர் கடைப்பிடிக்கலானார்.

இந்த முறையை அவர் தனது 9-வது வயதில் முதல் முதலாகக் கையாண்டு பார்த்தார். தனது சொந்த ஊரிலுள்ள பிரத்தியேகப் பள்ளியில் அப்பொழுது அவர் படித்து வந்தார்: அப்பொழுது அவர் காலையிலும் மாலையிலும் வயலில் வேலை செய்வார். பிரத்தியேகப் பள்ளி ஆசிரியர்களான பழைய முறையைச் சேர்ந்தவர்களுக்கு மாணவர்களை அடிப்பதென்றால் ஒரு அலாதி மகிழ்ச்சி. "அடியாத பிள்ளை படியாது" என்ற கொள்கையை பழைய நாட்களில் குழந்தைகளுக்குக் "கல்வி போதிப்பதற்காக" பெற்றோரும், ஆசிரியர்களும் பொதுவாகக் கையாண்டு வந்தனர். 'மா சே-துங்' கின் வாத்தியாரும் இதற்கு விதி விலக்கல்ல. பிள்ளைகளைக் கடுமையாகத் தண்டிப்பதற்கு- சவுக்கால் அடிப்பது, உள்ளங்கை, தலை, பாதங்கள், தொடைகள் ஆகியவற்றில் அடிப்பது, "ஊதுபத்தி முழங்கால் மண்டி" போடச்செய்வது ஆகிய பலவித அஸ்திரங்களைப் பிரயோகிப்பார். ஊசிபோன்ற ஓரங்களையுடைய பலகையின் மீதோ அல்லது கற்கள் கொட்டிய தரையின் மீதோ குற்றம்செய்த பிள்ளையை மண்டிபோடவைத்து ஒரு ஊதுபத்தி முழுவதும் எரியும்வரை இருத்திவைப்பது தான் "ஊதுபத்தி முழங்கால் மண்டி" எனப்படுவதாகும். இதை மா சே-துங் எதிர்த்ததில் ஆச்சரியமில்லை. முதல் தடவையில் சாத்வீக எதிர்ப்பு முறையை-அதாவது பள்ளிக்கு வராமல் இருந்துவிடும் முறையை அவர் கையாண்டார். பள்ளிக்கு வராமல் குன்றின் சரிவுவழியாக ஏதோ ஒரு கற்பனை நகரை நோக்கி அவர் ஓடிப்போனார், மூன்று நாள் பிரயாணம் செய்தபிறகு, அந்தப் பள்ளத் தாக்கையே சுற்றிச்சுற்றி வந்திருப்பதையும், தன் வீட்டிலிருந்து சுமார் 3 மைல்தூரம்தான் வந்திருப்பதாகவும் அவர் உணர்ந்தார். அவரது குடும்பத்தார் அவரைக் கண்டு பிடித்து வீட்டுக்கு அழைத்து வந்தனர். வீட்டுக்கு வந்த பிறகு, முன்போல் அவர்மீது அவர் அப்பாவும் சீறிவிழவில்லை; வாத்தியாரும் கடுமையாக நடந்துகொள்ளவில்லை

என்பதை அவர் கண்டுகொண்டார். இந்த எதிர்ப்பினுல் ஏற்பட்ட பலன் அவரது இளம் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்தது. அவரே பின்னர் ஒருதடவை கூறியதுபோல ஒரு புதிய வார்த்தையில் சொல்லப்போனுல், அவர் ஒரு வெற்றிகரமான "வேலைநிறுத்தம்" செய்து முடித்தார்.

மா சே-துங் அப்பாவின் கடும் உழைப்பினுல் குடும்பம் செழித்தது. 'மா சே-துங்'கும் இளமை தொட்டு உழைத்து வந்தார். ஆனுல் இருவரும் வெவ்வேறு வித அபிப்பிராயங்கள் கொண்டிருந்தனர்; தானிய வியாபார சம்பந்தமான விஷயங்களில் சம்பாதிப்பது பற்றியும், பஞ்ச காலங்களில் சாதாரண விலைக்கு தானியத்தை விற்க மறுப்பதிலும் பலத்த அபிப்பிராய பேதம் அவர்களிடையே நிலவியது. இந்த அபிப்பிராய வித்தியாசங்களால் தந்தைக்கும் மகனுக்கும் இடையே முரண்பாடு முற்றிக்கொண்டே வந்தது. பிறரைச் சுரண்டி அநியாயமாகச் சம்பாதிக்கும் வழியை பழைய சமுதாயம் மறைமுகமாகவோ பகிரங்கமாகவோ ஆதரித்து வந்தது. இளம் 'மா சே-துங்'குக்கோ இது கொஞ்சமும் பிடிக்கவில்லை.

தனது தந்தையின் அடாபிடிச் செயல்களை எதிர்ப்பதன் மூலம் அதற்குப் பலியாகி நெடுங்காலமாய் வருந்துகின்ற தன் தாயின் மீது அவர் மிகவும் அனுதாபம் கொண்டார். தன் தந்தை குடும்பத்தை நடத்தும் முறையை அவர் தாய் ஒத்துக் கொள்வதில்லை; அதற்காக அந்த அம்மை அவரை பகிரங்கமாக எதிர்ப்பதில்லை. எப்பொழுதாவது ஏதோ ஒரு சின்ன வார்த்தையில் அவரைக் கடிந்து கொள்வாள், அல்லது வாய்மூடி இருந்து விடுவாள். தன் தாயின் கையற்ற நிலைகண்டு 'மா சே-துங்' வருந்துவார்; கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயுள்ள இந்த தாரதம்யத்தைக் கண்ட அவரது இளம் உள்ளத்தில், நிலப்பிரபுத்வ ஆண்-பெண் அநீதி முறையின் பயங்கர அம்சத்தை எதிர்த்து அவர் பின்னர் தொடங்கிய கிளர்ச்சிக்கு விதை தூவப்பட்டது. "நிலப்பிரபுத்வம்", "ஆணுக்கு உயர்ந்த அந்தஸ்து" என்ற பதங்கள் அன்று அவருக்கு விளங்கவில்லை; ஆனுல் கடுமையான, சர்வாதிகார மனம் படைத்த அவரது தந்தையை எதிர்க்கும் ஒரு பொதுப் போராட்டத்

தில் அவர் தாய், தம்பி, அவர் வீட்டில் வேலை செய்யும் விவசாயி ஆகியோருடன் சேர்ந்து ஒரு "ஐக்கிய அணியை" அமைப்பது பற்றி அவர் நன்கு அறிந்திருந்தார். ஆயினும், அவரது அப்பா தன்னைத் திட்டுவதற்கு இடம் வைக்காமல் தனது வேலைகளை சரிவரச் செய்யவும், கணக்கு வேலையில் உதவுவதிலும் அவர் கொஞ்சமும் தவறுவதில்லை.

## 8. நாட்டைப் பாதுகாப்பதில் நாட்டம்

ஏகாதிபத்திய நாடுகள் தங்களது ஆக்கிரமிப்பு முயற்சிகளை இரட்டிப்பு மடங்கு அதிகரிக்கவும், சீனாவின் சர்வ தேச நிலைமை மிகவும் சீர்கெட்டு வந்தது. ஆயினும் மக்கள் தங்கள் போராட்டங்களை நடத்துவதில் கொஞ்சமும் தளரவில்லை. 1900-ம் வருடத்தில், **ஐஹோடுவான்** (பாக்ஸர் இயக்கம்) ஆரம்பமாயிற்று. அப்பொழுது மா சே-துங்குக்கு 7 வயதுதான். அந்நியர் ஆக்கிரமிப்பையும், மஞ்சு ஆட்சியையும் எதிர்க்கும் விவசாய இயக்கமாக **ஐஹோடுவான்** ஆரம்பமானது; "மஞ்சு ஆட்சியை முறியடித்து மிங் வம்ச ஆட்சியை மீண்டும் ஏற்படுத்துக" என்று அது கோஷமிட்டது. மஞ்சு சர்க்கார் இந்த கோஷத்தை பயன்படுத்திக்கொண்டு, "மஞ்சு ஆட்சியை ஆதரித்து அந்நியர்களை நிர்மூலமாக்குங்கள்" என்று அதை மாற்றி கோஷமிட்டது. இறுதியில் அந்த இயக்கம் சிதறுண்டது; அதைச் சேர்ந்தவர்கள், மஞ்சு சர்க்கார், அந்நியப் படையெடுப்பாளர்கள் ஆகியோரின் கூட்டுப் படையால் கொலை செய்யப்பட்டனர். 8 நாடுகளின் கூட்டுப் படைகள் பீகிங் நகரில் நுழைந்து தாக்கினார்கள்; "பீகிங் உடன் படிக்கை" (1901) என்று அழைக்கப்படும் ஒரு அநியாயமான பட்சபாதமான உடன் படிக்கை செய்யப்பட்டது. அரைக் காலனி அந்தஸ்திலிருந்த சீனா மற்றொரு நுகத்தடியின் கீழ் அகப்பட நேர்ந்தது.

சீன-ஜப்பான் யுத்தம் தொடங்கியதும், 1894-ம் ஆண்டிலேயே சீனாவைத்துண்டாட அந்நிய வல்லரசுகள் சதிசெய்யத் தொடங்கின. சில வருடங்களுக்குப் பிறகு,

படிப்பதில் அக்கறைகொண்டிருந்த மா சே-துங் கையில் 'அந்நிய வல்லரசுகள் சீனுவைத் தூண்டாடும் அபாயம்' என்ற ஒரு வெளியீடு கிடைத்தது. அதில், கொரியாவையும் தைவான் என்ற சீனத் தீவையும் ஜப்பானியர் கைப்பற்றினர் என்பனபோன்ற விஷயங்கள் கூறப்பட்டிருந்தன. (அந்தப் புத்தகத்தின்முதல் பக்கத்திலுள்ள பரபரப்பை யூட்டும் "ஐயோ, சீனு அழியும் தறுவாயில் இருக்கின்றதே!" என்ற முதல் வரியை மாசே-துங் இன்னும் நன்ருக ஞாபகத்தில் வைத்திருக்கிறுர்.) அந்தப் புத்தகத்தைப் படித்து முடித்ததும், தன் தாய் நாட்டுக்கு நேர்ந்துள்ள துரதிஷ்டத்தைப் பற்றி மா சே-துங் மனம் பதறினுர்; அன்றிருந்து தன்னுட்டைப் பாதுகாக்கும் பணியில் தன்னை அர்ப்பணிப்பதென்று அன்றே முடிவுகட்டினுர்; இந்தக் கடமையில் ஒவ்வொரு சீனரும் பங்குகொள்ள வேண்டுமென்று அவர் கருதினுர். அன்று முதல் சீனுவையும், சீனமக்களையும் விடுதலை செய்யும் பிரச்சினையில் தனது முழுக்கவனத்தையும் செலுத்த முனைந்து, அதுபற்றி மேலும் அறியவும், அதைத் தீர்க்கவும் தனது அரிய மூளையைச் செலவிட முனைந்தார்.

அத்தகைய ஒரு முடிவினுல் உந்தப்பட்டு பல விஷயங்களைப் பற்றி நன்கு அறிந்துகொள்ளும் அடங்கா ஆவலினுல் தூண்டப்பட்டதால், அவ்வூரிலுள்ள அரிசிக்கிடங்கில் வேலை பழகவேண்டுமென்ற அவர் அப்பாவின் யோசனையை அவர் நிராகரித்தார். அதற்குப் பதிலாக, சியாங்கியாங் சென்று அங்குள்ள "அந்நிய நாட்டுக் கல்விமுறை" போதிக்கப்படும் பள்ளியில் அவர் சேர்ந்தார். முதல் முறையாக தான் பிறந்த **ஷாவோஷான்சுங்**கை விட்டு, 16 வயதுடைய மா சே-துங் புறப்பட்டு, சுமார் 8 மைல் தூரமுள்ள டுங்டைஷான் அடிவாரத்தை அடைந்தார்; "புதிய கல்வியை" முதல் முறையாகப் பருக, அவர் தன் முதுகில் துணிமணி சாமான் மூட்டை ஒன்றைச் சுமந்துகொண்டு நடந்தார்.

சியாங்சியாங் நகரத்தைக் கடந்து வாங்சன் வாசல் வழியாக நுழைந்து கல்மண்டபம் வழியாக இறங்கினுல் லியன்ஷுய் என்ற நதி தென்படும். அதைக் கடந்து

செல்ல விசைப் படகுகள் உள்ளன. மறுகரையில், கற்கள் பதித்த பாதை வழியே சிறிதுதூரம் நடந்தால் ஒரு நேர்த்தியான மரங்களடர்ந்த டுங்டைஷான் என்ற குன்று வலது புறம் தென்படும். குன்றில் நீட்டிக்கொண்டிருக்கும் பகுதிக்கு அருகில் "பூதநகர"த்திலிருந்து சுமார் 2 மைல் தூரத்தில் டுங்கன்பிங் என்ற ஒரு இடம் உள்ளது. உயரமான வளைந்த செங்கற் சுவரால் சூழப்பட்டு, முன்புறமும் பின்புறமும் கனமான கறுத்த அரக்குபூசப்பட்ட இரட்டைக் கதவுகள் கொண்ட ஒரு அழகான வசதியான வீடு உள்ளது; அதில் முன்னர் **டுங்ஷான் கழகம்** இருந்தது; இப்பொழுது சியாங்சியாங்கைச் சேர்ந்த டுங்ஷான் உயர்தர ஆரம்பப்பள்ளி என்று அதற்குப் பெயரிடப்பட்டுள்ளது.

மாலை நேரத்தில், கோபுரம்போலிருக்கும் டுங்டைஷான் குன்றும், வெண்மைநிறமுடைய வானளாவிய ஏழடுக்கு விகாரமும், பள்ளிக்கு அருகேயுள்ள வட்டக் குளத்து நீரில் பளபளவென மின்னின. அங்கு புதிதாக வந்த மாசே-துங் தனது இளம் நண்பர்களுடன் அடிக்கடி வந்து உலாவுவார். பாலத்தின் கல்மதிற் சுவரில் சாய்ந்துகொண்டு அவர்கள் சம்பாஷிப்பதும், தண்ணீரில் இங்குமங்கும் துள்ளும் மீனைப் பார்ப்பதுமாக அவர்கள் இருப்பார்கள். அதற்குச் சற்று அப்பால் விளையாட்டு மைதானத்தில் மாணவர்கள் ஊஞ்சலாடுவதும், கவாத்துக்கள் செய்வதும், ஓடுவதும், சிரிப்பதுமாக இருப்பார்கள்......

அவர் வந்த சில நாட்களுக்குப் பிறகு, படிக்கும் அறைகள், வகுப்பு நடக்கும் அறைகள், தங்கும் அறைகளாக உபயோகிக்கப்பட்ட மண்டபங்களில் போவதும் வருவதுமாக இருக்கும் அவரை மற்றவர்கள் கவனிக்க ஆரம்பித்தனர். அறிவு தவழும் முகம், நட்பு நிறைந்த கண்கள், ஒல்லியான உடல் உடைய அவர் நீலநிறத்தில் ஒரு கால்சட்டையும், மேல்சட்டையும் மட்டும் அணிந்துகொள்வார். அவரது பள்ளித் தோழர்களிற் பெரும்பாலனவர்கள் நிலச்சுவான்தார் குடும்பங்களைச் சேர்ந்தவர்களாதலால் விலையுயர்ந்த உடைகளணிந்து வருவார்கள். சிலர் நீண்ட அங்கி அணிந்து பலவர்ணமுள்ள இடுப்புக்கச்சை ஒன்றை கரிய மேற் சட்டைக்குக் கீழே பாதி தெரியும்படியாக அணிந்து,

அதற்கு ஏற்றுற்போன்ற தோலும் பட்டும் கலந்த பாத ரட்சையும் அணிந்திருப்பார்கள். நாகரீகமான மாணவர் களுக்கென்று தயாரிக்கப்பட்ட உடைகளையும் சிலர் அணிந் திருந்தனர். ஆனால் மாசே-துங்கிடம் கையால் நெய்த பருத்தி உடையான ஒரே ஒரு கால்சட்டையும், மேல் சட்டையும் தானிருந்தது. சியாங்சியாங் பேச்சு என்று சொல்ல முடியாதபடி அவர் உச்சரிப்பு இருக்கும். இது பற்றி அவரிடம் கேட்டபோது, அவரது சொந்த ஊர் சியாங்டன்னுகை இருந்தபோதும், அவரது தாய், சியாங் சியாங் கைச் சேர்ந்த வென் என்னும் குடும்பத்திற் பிறந்த வள் என்று பதில் கூறினர், இந்தத் தடவை அவரது மைத்துனர் வென்னைக் கூட்டிக்கொண்டுதான் அவர் இங்கு வந்துள்ளார். வென் குடும்பத்தைச் சேர்ந்த அந்த மாணவன் சென்ற வருடம் இந்தப் பள்ளியில் முதல் முதலாகச் சேர்ந் தவனுதலால் பல மாணவர்களுக்கும் அவனைத் தெரியும். தனிமையிலிருப்பதாக மாசே-துங் சிலநாட்கள் கூறினர். ஆனல் அவருக்கும் ஒரு சில நண்பர்களும் கிடைத்தார்கள்; அவர்களெல்லோரும் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; நல்ல உடை கிடையாது அவர்களுக்கு; ஆனல் கஷ்டப் பட்டுப் படித்து முன்னுக்கு வரவேண்டுமென்று அக்கறை கொண்டவர்கள். அவர்கள் பேசுவதெல்லாம் ஒரே வித மான உச்சரிப்பாக இருந்தது; ஆனல் இது சியாங்சியாங் கில் உச்சரிப்பதைவிட சில மாறுபாடுகள் கொண்டதா யிருந்தது. உதாரணமாக, "ஐ" என்பதற்குப் பதிலாக வோ என்று அவர்கள் சொல்வார்களே தவிர, விநோதமான சியாங் சியாங் சப்தமான கா என்று சொல்வ தில்லை.

மா சே-துங் மெதுவாகப் பேசுவார்; கள்ளங்கபடும், படாடோபமும் இல்லாதவர். பள்ளியில் அவர் படித்து மடமடவென்று முன்னேறியதால், எல்லா வாத்தியார் களுக்கும் அவர்மீது பிரியம்; குறிப்பாக இலக்கிய வாத்தியா ருக்கும், சீனமொழி ஆசிரியருக்கும் அவர்மீது ரொம்பப் பிரியம்; அவர் இலக்கியங்களை நன்கு கற்றிருந்ததால் பழைய முறையில் உள்ள கட்டுரைகள் எழுதுவதில் அவர் மகா நிபுணர்.

காலை நேரங்களில் மாணவர்களின் ஆஜர் எடுக்கப்படு கின்றபொழுது பள்ளி ஆசிரியர் ஒரு குட்டிப் பிரசங்கம் செய்வது வழக்கமாகும். சீனுவின் சீர்குலைவும், அந்நிய வல் லரசுகளின் அலக்கழிவும் பற்றி அடிக்கடி குறிப்பிடப்படும் பொழுது மாணவர்களுக்கு ஆத்திரம் பொங்கி வழியும், அங்குள்ள சில ஆசிரியர்கள் அப்பொழுதுதான் ஜப்பானி லிருந்து திரும்பி வந்துள்ளவர்கள். அவர்களிடமிருந்து, **மெய்ஜி** சீர்திருத்தத்திற்குப்பிறகு (1868) எப்படி ஜப் பான் வலிமை பெற்றது என்பதையும், சீனுவைக் கொள்ளை யடிக்க ஏற்கனவே எத்தனை அந்நிய வல்லரசுகள் கண் வைத்திருந்தன என்பதையும் மாசே-துங் அறிந்துகொண் டார். இதனுல், தனது நாட்டின் தலைவிதியில் அவர் மேலும் மேலும் அக்கறை கொள்ளத் தொடங்கினுர். டுங்ஷான் ஆரம்பப் பள்ளியில், தானுகவே படிக்கும் நீண்ட காலப் பழக்கத்தையும் அவர் கைவிடவில்லை. சீன சரித் திரப் பாடம்தான் அவருக்கு மிகப் பிடித்த பாடமென்ருலும், அந்நிய நாடுகளின் சரித்திரம், பூகோளத்தையும் தொட்டுப் பார்த்தார். அவர் நண்பர் ஒருவர் அவருக்கு இருபுத்தகங்கள் சன்மான்மாகக் கொடுத்தார். கங் யூ-வேய் துவக்கிய சீர்திருத்த இயக்கத்தைப் பற்றியது (1898) ஒன்று; லியாங் சீ-சாவ் ஆசிரியராக உள்ள "புதிய மக்கள் கதம்பத்" திரட்டு மற்ருெரு புத்தகம். அவைகளை மாசே-துங் பலமுறை படித்து மனப்பாடம் செய்தார். சீனுவை மீட்கவேண்டும் என்ற பிரச்சினையை மையமாகக்கொண்டு அந்த இரு ஆசிரியர்களும் எழுதியிருப்பதால், அன்று கங், லியாங் இருவரையும் அவர் பாராட்டினுர்; லியாங் என்ற ஆசிரியரோ கனல்கக்கும் வசனநடைநிபுணராகவிளங்கினுர்.

ஒருநாள் மாலை; பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருக் கிருர்கள்; மணியடித்ததும் படிக்கும் அறைக்குள் மடமட வென்று புகுந்தார்கள்; அப்பொழுது மாசே-துங், பள்ளிக் கூடத்தின் இரண்டாவது வாசல் வழியாகப் போய்க்கொண் டிருந்த ஒரு மாணவன்கூட இருந்தார். அந்த மாணவன் கையில் ஒரு புத்தகம் இருந்தது.

"உங்களிடம் உள்ள அந்தப் புத்தகம் என்ன?" என்று மா சே-துங் நயமாகக் கேட்டார்.

"உலகத்து வீரர்களும் மேதாவிகளும்"

"அதை நான் பார்க்கலாமா?"

சில நாட்களுக்குப்பிறகு அந்தப் புத்தகத்தை மா சே-துங் திருப்பிக் கொடுத்துவிட்டார். மிகவும் பணிவாகக் கூறினர்.

"உங்கள் புத்தகத்தை உபயோகித்ததற்கு மன்னிக்கவும்"

அந்த விநோதமான மாணவன் புத்தகத்தைத் திறந்து பார்த்தான்; அதில் பல இடங்களில் வட்டங்களும் புள்ளிகளும் போடப்பட்டிருந்தன. **வாஷிங்டன், நெப்போலியன், மகா பீட்டர், மகா காதரைன், வெலிங்டன், கிலாட்ஸ்டன், ரூஸோ, மான்ட்டெஸ்க்யூ, லிங்கன்** ஆகிய சரிதப்பகுதிகளில் ஏராளமாக குறிக்கப்பட்டிருந்தன. மா சே-துங் சொன்னதாவது:

"நமது நாட்டை பலமுடையதாக்கி, வளங்கொழிக்க வைக்க நாம் முயற்சிக்க வேண்டும்; அப்பொழுதுதான் இந்தோ-சீன, கொரியா, இந்தியா சென்ற பாதைகளை நாமும் பின்பற்றமாட்டோம். புராதன சீனப் பழமொழியான, 'குடை கவிழ்ந்த முதல் தேர் அடுத்து வரும் தேருக்கு எச்சரிக்கையாகும்' என்பது உங்களுக்குத் தெரியும். நாம் அணைவரும் ஒன்று திரளவேண்டும். 'தனது நாட்டின் விதியை' நிர்ணயிப்பதில் ஒவ்வொரு மனிதனும் பங்குகொள்ள வேண்டும்! என்று கு யென்-வூ கூறியது முற்றிலும் சரியே."

சிறிதுநேரம் பேச்சை நிறுத்தி மறுபடியும் அவர் கூறியதாவது:

"சீனவின் சீர்குலைவு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. ஆகையால், சீனவை செல்வமும், பலமும், சுதந்தரமும் உடையதாகச் செய்வதற்கும் நீண்டநாள் பிடிக்கும். ஆனல் நீண்டநாள் என்பதற்காக நாம் கவலைப்படவேண்டியதில்லை. இங்கு பார்," என்று புத்தகத்தைத் திறந்து ஒரு பக்கத்தைச் சுட்டிக்காட்டினர், "வாஷிங்டன் தலைமையில் நின்று எட்டு வருடகாலம்—எட்டு நீண்ட ஆண்டுகள், கஷ்டம் நிறைந்த ஆண்டுகளாகப் போராடிய பிறகுதான் அமெரிக்காவிற்கு வெற்றியும், சுதந்தரமும் கிடைத்தது...'"

# அத்தியாயம் II

## 1911-வது ஆண்டு புரட்சிச் சூறுவளிக்கிடையே

### 9. புரட்சியில் முதல் தொடர்பு

டுங்ஷான் ஆரம்பப்பள்ளியில் மா சே-துங் ஒரு வருட காலம்தான் படித்தார். பிரயாணம் செய்யவேண்டுமென்ற ஆவல் அவருக்குப் பிறந்தது. ஆரம்பப்பள்ளி ஆசிரியர் ஒருவர் அவருக்கு ஒரு சிபார்சுக் கடிதம் எழுதிக்கொடுத் தார், மறுபடியும் அவரது துணிமணிகளை மூட்டையாக முதுகில் கட்டிக்கொண்டு சியாங்டன் என்ற ஊரிலுள்ள உயர்தர ஆரம்பப்பள்ளிக்குச் சென்றார்; ஆனால் அவர் உயரமாயிருப்பதால், பள்ளித் தலைமைஆசிரியர் அவரை சேர்த்துக்கொள்ள மறுத்துவிட்டார். சியாங் நதியில் ஓடிக் கொண்டிருந்த ஒரு சிறிய நீராவிக்கப்பலில் அவர் ஏறினார். அதிகமான பிரயாணிகளை ஏற்றிச்சென்ற அந்தக் கப்பலில் 3-வது வகுப்பில் பிரயாணம்செய்து சாங்ஷா வந்து சேர்ந் தார், அங்கு, சியாங்சியாங் பிள்ளைகள் படிப்பதற்காக வென்று ஒரு மத்தியதரப்பள்ளி இருந்தது. தெருக்களிலெல் லாம் ஒரே ஜனக்கூட்டமாகவும், எங்கு பார்த்தாலும் சுறு சுறுப்பாகக் காணப்பட்ட அந்த நகரைக் கண்டதும் அவர் ஒரே ஆச்சரியத்தில் மூழ்கி வாயடைத்துப் போனார். தான் மிகவும் உயர்ந்த பள்ளி யென்று கருதிவந்த சியாங்சியாங் மாகாண மத்தியதரப்பள்ளியில் தனக்கு இடம் கிடைக் காமற் போய்விடுமோவென்று அவருக்கு ஒரு பயம் திடீ ரென்று தோன்றிற்று, ஆனால், எந்தவித சிரமமுமின்றி அவரைப் பள்ளியில் சேர்த்துக்கொண்டது அவருக்கே ஆச்சரியமாயிருந்தது.

மஞ்சு சாம்ராஜ்யத்தை முறியடித்த புரட்சி நடந்த 1911-ம் ஆண்டில் அவர் அந்தப்பள்ளியில் சேர்ந்தார்.

குறிப்பிடத்தக்க தீவிரமான ஒரு தன்னம்பிக்கையோடு, மா சே-துங் சாங்ஷா வந்து சேர்ந்தார். சித்தாந்த ரீதியில் அவர் வெகுவாக முன்னேறியிருந்தாலும், அவரது வெளித் தோற்றமும், நடவடிக்கையும் முன்போலவே காணப்பட்டது. அடக்கத்தோடு, ஆடம்பரமின்றி, சிக்கனமாகவே அவர் என்றும் இருந்தார்,

சாங்ஷாவில்தான் அவர் முதல்முதலாக ஒரு தினசரிப் பத்திரிகையைப் பார்க்க நேர்ந்தது, அதன் பெயர் "ஜன பலம்"; அது, டுங் மெங் ஹுய் (கோமின்டாங்குக்குமுன்பிருந்தது) என்ற ஸ்தாபனத்தால் நடத்தப்பட்டது. மஞ்சூக்களை எதிர்த்து கான்ட்டனில் நடந்த ஆயுதந் தாங்கிய கலகத்தில் உயிர் நீத்த 72 தியாகிகளைப்பற்றிய கட்டுரையை அதிற்படித்து அவர் மனமுருகிப்போனார். சன்யாட்சென், டுங்மெங் ஹுய் ஆதரித்த அரசியல் மேடையைப் பற்றியும் அவர் அதேசமயத்தில் அறியலானார். அவருக்கு அடங்கா மகிழ்ச்சி ஏற்பட்டது; அவரே ஒரு கட்டுரை எழுதி பள்ளிக்கூட சுவரில் ஒட்டினார், ஜப்பானிலிருந்து சன்யாட்சென்னை திரும்பி அழைத்து புதிய சர்க்காரின் ஜனாதிபதியாகவும், கங் யூ வே யை பிரதம மந்திரியாகவும், லியாங் சி-சோ வை வெளிநாட்டு மந்திரியாகவும் ஆக்கவேண்டுமென்று அவர் குறிப்பிட்டிருந்தார், அந்தக் கட்டத்தில்' சன்யாட்சென் கருத்துக்களுக்கும் சுங், லியாங் கருத்துக்களுக்கும் இடையிலுள்ள வித்தியாசத்தை அவர் எப்படி உணர்ந்திருக்கமுடியும்? ஆனால், சீர்திருத்தத்திற்காகவும், புரட்சிக்காகவும் பாடுபடும் அனைவரும், கொடுங்கோன்மையும், கோழைத்தனமும் நிறைந்த மஞ்சு ஆட்சியை ஒழிக்க ஒன்றுபடவேண்டும் என்பதைத் தெட்டத் தெளிவாக அவர் உணர்ந்திருந்தார்,

சீனாவுக்கு எதிராக சர்வதேச ஏகாதிபத்தியம் தனது ஆக்கிரமிப்பைத் தொடங்கிய நாள்தொட்டு, மஞ்சு சர்க்கார் இருமுனைக் கொள்கையை அனுஷ்டித்து வந்தது. வெளிநாடுகள் சம்மந்தப்பட்ட மட்டில், எந்தப் பிரச்சினை எழுந்தாலும் அதில் சமரசம் பண்ணவோ, விட்டுக்கொடுக்கவோ அது என்றும் தயாராக இருந்தது; உள்நாட்டுப் பிரச்சினைகளில், மக்களைச் சுரண்டி அடக்கி ஒடுக்குவதில்

அது மிகத்தீவிரமாக ஈடுபட்டது. மஞ்சூக்களை எதிர்த்தும், தாங்கமுடியாத வரிச்சுமையை எதிர்த்தும், பசிக் கொடுமையை எதிர்த்தும் பலதடவைகளில் வெகு ஜனப் பகுதிகள் கிளம்பியிருக்கின்றன. அந்நிய ஏகாதிபத்தியத் திற்கு ரயில்வே நலன்களை விற்றுவிடத் துணிந்த மஞ்சூ சர்க்காரின் ஒரு யத்தனமான **ரயில்வேயை தேசீய மயமாக்கும் மசோதா** கடுமையான எதிர்ப்புக்குள்ளாகியது. மஞ்சூ கொடுங்கோன்மைக்கு எதிராக பொதுஜனக்குரல் எழுந் தது. ஒரு அரசியல் சட்டம் வகுக்கப்படவேண்டுமெனவும், பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டுமெனவும் எழுந்த கருத்து எட்டுத்திசையிலும் பரவியது. புரட்சிவாதிகளால் நடத்தப்பட்ட ஆயுதப் போராட்டங்களின் எண்ணிக்கை அதிகரித்தன.

பழமைக்கும் புதுமைக்கும் இடையே கடும் போராட் டங்கள் நடக்கும் களமாகவே ஹூனன் மாகாணம் என்றும் இருந்து வந்திருக்கிறது. ஹூனனில்தான் புதிய கல்வி என்ற மலர்பூத்தது. சீர்திருத்த இயக்கத்தில் கலந்து கொண்ட மிகத்தீவிரமான அங்கத்தினர்களிற் சிலர் ஹூனன் மாகாண வாசிகளாவர். ஹூனனில் "தற்கால சம்பவங்களைப்பற்றிப் பயிலும் பள்ளி" ஒன்று நிறுவப் பட்டது. போக்குவரத்து முறையில் முன்னேற்றம், சுரங் கங்கள் ஆரம்பம், ராணுவக் கழகங்கள் ஏற்படுத்தல், ராணுவப்பயிற்சிக் கூடங்கள் ஆகியவை ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டன. "தென் பகுதி அறிஞர்கள் சங்கம்" என்று ஒரு ஸ்தாபனம் அமைக்கப்பட்டது; அதில் ஆயிரத் துக்கு மேற்பட்டவர்கள் அங்கத்தினர்கள்; அதன் நோக்கங்களாவன; "தென்பகுதியிலுள்ள தேசபக்தர்களை யெல்லாம் ஒரே அணியில் ஒன்று திரட்டுவது; ஹூனனை ஆரம்பதளமாகக் கொண்டு தேசபக்தி லட்சியத்தைப்பற்றி விவாதிப்பது; நாட்டைப் பாதுகாக்கத் திட்டங்கள் வகுப் பது," (டான் சூ-துங் வாழ்க்கை வரலாறு என்ற லியாங் சீ-சாவ் எழுதிய தொகுப்பு நூலிலிருந்து). 10 நாளைக்கு ஒருமுறை வெளியிடப்பட்ட **சியாங் சுயே சின்பாவ்**, தின சரியாக ஆரம்பிக்கப்பட்டுப் பின்னர் மாத வெளியீடாக்கப் பட்ட **சியாங் பாவ்** என்ற இரு வெளியீடுகளும் மிகவும்

உதவிகரமாக இருந்தன. இத்தகைய நடவடிக்கைகளால், முன்னேற்றமடைந்துள்ள மாகாணங்களில் ஹூனன் முதன்மையாக விளங்கிற்று.

டுங் மெங் ஹூய் ஸ்தாபனத்தின் ஒரு பகுதியான ஹூவா சிங் சங்கத்தலைவரான ஹூவாங் சிங் என்பவர் சாங்ஷாவில் பிறந்தவர். 72 புரட்சி வாதிகள் கொலை செய்யப்பட்ட கான்ட்டன் கலகத்திற்கும் இவர் தலைவராக யிருந்தவர். ஆன்வேயில் புரட்சிகர வேலைகளில் ஈடுபட்டிருந்த சூ சி-லின், சியூ சின் ஆகிய இருவரும், அந்த 72 புரட்சி வீரர்களும் கொலைசெய்யப்பட்ட சம்பவம் ஹூனன் மக்களிடையே பெரும் பரபரப்பை உண்டு பண்ணிற்று, ஆத்திரங்கொண்ட அவர்கள் தீவிரச்செயலில் இறங்கினர்; ரயில்வேயை தேசீயமயமாக்குவதை எதிர்த்தும், அரசியல் சட்டம் செய்வதையும், பாராளுமன்றத்தைக் கூட்டுவதையும் ஆதரித்தும் இயக்கத்தை நடத்தினர்கள். புரட்சி வீரர்களில் மிகப்பிரபலமான சூ டே-லி என்பவர் தனது விரலை அறுத்து அதிலிருந்து வடியும் ரத்தத்தை மையாகத்தொட்டு, பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டுமென்று ஒரு மகஜர் எழுதி அனுப்பினர் என்ருல் பொதுஜன எழுச்சி எவ்வளவுதூரம் உயர்ந்திருந்தது என்பதை நன்கு அறியலாம்.

மக்கள் மனதிபல புரட்சி அலை பொங்கி எழுந்தது. 1903–ல் **ஷாங்காய் தேசபக்தக் கழகம்** நடத்திய "தேசபக்திக் கலகத்தி"லிருந்து ஏராளமான படிப்பாளிகள் மஞ்சு-எதிர்ப்புப் பிரச்சாரத்தில் தீவிரமாக இறங்க ஆரம்பித்தார்கள். நாடு முழுவதிலுமுள்ள ஆசிரியர்களும், மாணவர்களும் இரவுப் பள்ளிக்கூடங்களை நடத்தியும், துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டும் மக்களிடையே புரட்சிக் கருத்துக்களைப் பரப்பி வந்தனர். மாணவர்களிடையே நிலவிய தீவிரமான மஞ்சு-எதிர்ப்பு உணர்ச்சி அலைமோததலால், "சடைமுடியைக் கத்தரிப்பது" என்ற நிலை ஏற்பட்டு விட்டது. சியாங் சியாங் நடுத்தரப் பள்ளியில், தனது சடைமுடியை முதலில் கத்தரிக்க முன்வந்தவர்களில் மா சே-துங் ஒருவர். சடைமுடியைக் கத்தரித்துக் கொண்ட அவரும் அவரது நண்பரும் மற்றவர்களின் சடை

களையும் கத்தரிக்க முற்பட்டனர்; அவர்களுடன் "சடையைக் கத்தரிக்கும்" ஒப்பந்தத்தில் முன்னால் கையெழுத்திட்டு விட்டுப் பின்னர் அதைச் செய்யத் தயங்கிய 10-க்கு மேற்பட்டவர்களின் சடைகளை நிர்ப்பந்தமாக அவர்கள் கத்தரித்து விட்டனர்.

இது, 1911-வது வருடப் புரட்சி சமீபிக்கும் தருணத்தில் நடந்தது. "மஞ்சூக்களை விரட்டுங்கள்!", "சீனாவை விடுவிப்போம்!" "குடியரசை அமைப்போம்!", "நில உரிமைகளில் சமத்துவம் வேண்டும்!" என்ற கோஷங்கள் மக்களின் இதயத்தில் ஆழமாகப் பதிந்தன. புரட்சி வாதிகள் மிகவும் தீவிரமானார்கள்; புரட்சி செய்ய வேண்டும் என்ற மக்களின் கோரிக்கையை இனித் தட்டிக் கழிக்க முடியாது. இந்த புரட்சிச் சூறுவளிக்கிடையே, இளமையும், ஆவேசமும் நிறைந்த 'மா சே-துங்' கலந்தார்.

## 10. புரட்சிப் பணிபுரிய சிப்பாய் வேலை

1911 அக்டோபர் 10-ல் **வூச்சாங்** கலகம் வெடித்தது; ஆனால் இது, அன்றிருந்த சீன சக்ரவர்த்தினி பிறந்த நாளில் அதாவது 40 நாட்களுக்குப் பிறகு ஆரம்பிக்கப்படவேண்டுமென்று முதலில் திட்டம் போடப்பட்டிருந்தது. ஆனால் புரட்சிக் கட்சியின் அங்கத்தினர் பட்டியல் ஒன்று மஞ்சு கையாட்களின் கரங்களில் அகப்பட்டு விட்டது. பலர் கைதி செய்யப்பட்டார்கள்; சிலர் தூக்கிலிடப்பட்டனர். இதனால் தான், கலகத்தை முன் கூட்டியே நடத்த நிச்சயித்தார்கள்.

சாங்ஷாவில் திடீரென்று எங்கு பார்த்தாலும் பரபரப்பு. ஹூனான் கவர்னர் ராணுவச் சட்டத்தைப் பிரகடனம் செய்தார். ஆயினும், நகரத்தின் சுவர்களுக்குள்ளும், வெளியிலும் புரட்சி வாதிகள் தங்களது ரகசிய நடவடிக்கைகளை நடத்தி வந்தனர். பள்ளிக்கூடங்களில் பிரசங்கங்கள் மூலம் மஞ்சூ-எதிர்ப்பு, ஹன்- (பெரும்பான்மை மக்கள்) ஆதரிப்பு உணர்ச்சியை சிலர் கிளறி விட்டனர். நகரத்திற்கு வெளியே கூடாரமடித்திருந்த புதிய சைனியத்

தின் மத்தியிலும் சிலர் புகுந்து அவர்களைக் கலகம் செய்யும்படி தூண்டினர்......

ஒரு நாள் மாகாண சியாங்சியாங் பள்ளிக்கு ஒரு புரட்சிவாதி வந்தார்; தலைமை ஆசிரியரின் அனுமதி பெற்று அவர் ஒரு பிரசங்கம் செய்தார்; அதைக்கேட்ட மாணவர்கள் அத்தனை பேர் உள்ளத்திலும் கனல் பற்றி எழுந்தது. மஞ்சூக்களை கடுமையாகத் தாக்கினார்கள்; குடியரசை நிறுவவேண்டுமென்று குரல் எழுப்பினார்கள். கூட்டத்துக்கு வந்திருந்த ஒவ்வொருவரும் ஆச்சரியத்தில் மூச்சடைத்துப் போனார்கள்.

அந்தப் பிரசங்கத்தைக்கேட்டு உணர்ச்சி வெள்ளத்தில் அப்படியே மூழ்கியிருந்த மா சே-துங், புரட்சியில் சேருவதென்று முடிவு செய்தார். ஐந்து நாட்கள் இதைப் பற்றி ஆலோசித்த பிறகு, புரட்சிப்பணி புரிவதற்கு சிப்பாயாக ஆவதுதான் சிறந்த வழி என்ற முடிவுக்கு வந்தார். ஹூப்பே கவர்னர் லீயுவான்-ஹூங் தலைமையிலிருந்த புரட்சிப் படையில் சேருவதென்று அவர் உறுதி கொண்டார். பிரயாணச் செலவுக்கு தனது சக-மாணவர்களிடமிருந்து பணம் கடன் வாங்கினார்; அவரோடு ஊச்சாங் வரை பல நண்பர்கள் சென்றனர். வீதிகளெல்லாம் ஒரே ஈரமாக இருப்பதால், வழுவழுப்பான தோல் செருப்புகளை அணிந்து கொள்ள வேண்டுமென்று ஒருவர் யோசனை கூறினார். இம்மாதிரி செருப்பு ஜதை ஒன்று தனது விவசாய நண்பர் ஒருவரிடத்தில் இருப்பது 'மா சே-துங்' ஞாபகத்திற்கு வந்தது. அவரது கிராமத்தைச் சேர்ந்த அவரது அந்த நண்பர், சாங்ஷா சுவர்களுக்கு வெளிப்புறத்தில் கூடாரமடித்துத் தங்கியிருந்த புது சைனியத்தில் ஒரு சிப்பாயாக இருந்தார். அந்த சிப்பாயைப் பார்க்கச் சென்ற அவரை, முகாமின் காவலாளி தடுத்து நிறுத்தினான்.

அங்கு ஏதோ நடந்துள்ளது. டுங் மெங் ஹூய், 49 வது, 50-வது பகுதிகளின் படையினர் வாழும் முகாம்களில் ஏற்கெனவே ஊடுருவிப் புகுந்து விட்டனர். அப்பொழுது தலைவர்களில் ஒருவரான ஹூவாங் சிங் என்பவர் ஹூனானில் இல்லை. கே லாவ் ஹூய் தான் வழிகாட்டியாக நின்

றது; அந்த இரு பகுதிப் படைகளையும் புரட்சியில் சேர்த்து லைச்சாங்-ஹாங்கோ புரட்சிக்காரர்களுடன் அணிவகுத்து நிற்கும்படி செய்துவிட்டது. மா சே-துங் அங்கு வந்து சேர்ந்த பொழுதுதான் புதிய சைன்யத்திற்கு குண்டு மருந்துகள் கிடைத்து, அவ்வளவு படையும் சாங்ஷாவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றன. உடனே அவர் நகரத்திற்குத் திரும்பினூர்; கதவுகள் மூடப்பட்டு விட்டன; ஆனால் பூட்டப்படவில்லை.

அது ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை. நகரத்திற்கு வெளியேயுள்ள கவாத்து மைதானத்திலிருந்து புதிய சைனியம் கிளம்பி, சாங்ஷாவின் வாசல் கதவுகளில் ஒன்றை நோக்கிச் சென்றது. ஒரு பாட்டம் குண்டு மழை பொழிந்த பிறகு "தாமரைக் குளத்து" ஆயுதக்கிடங்கைப் பிடிக்க ஒரு படை புறப்பட்டது; பிரதான துருப்புகள் எல்லாம் வாசல் வழியே நகரத்திற்குள் நுழைந்து கவர்னர் மாளிகையை நோக்கி நேரே சென்றனர். காவலாளிகள் எந்த எதிர்ப்பும் காட்டவில்லை; கவர்னர் சரணுகதி செய்யும்படி நிர்ப்பந்திக்கப் பட்டார். கவர்னர் மாளிகையின் உச்சியில் ஒரு பெரிய வெள்ளைக்கொடி பறக்க விடப்பட்டது. உடனே, சகல பள்ளிகளிலும், காரியாலயங்களிலும், கடைகளிலும் பல அளவு கொண்ட வெள்ளைக் கொடிகள் பறந்தன. பள்ளிக்கூடத்திற்கு மா சே-துங் திரும்பி வந்த போது, வாசல்களில் ஒரு வெள்ளைக்கொடி ஏற்கனவே தொங்க விடப்பட்டிருந்தது; சில சிப்பாய்கள் வெளியே காவல் புரிந்தனர். மஞ்சு சர்க்காரிலிருந்து ஹூனுன் விடுதலை பெற்றுவிட்டதாக அறிவிக்கப் பட்டது.

ஹூனுனின் கேலாவ்ஹூய்யைச் சேர்ந்த இரு தலைவர்கள் மாகாணத்தின் கவர்னராகவும், உதவி-கவர்னராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதாக பிற்பகலில் செய்தி வந்தது. அன்று மந்தாரமாக இருந்தது; ஜனங்கள் எல்லாம் பயந்து நடுங்கி, பரபரப்போடு இருந்தனர். ஆனால் சீக்கிரமே ஜனங்கள் தைரியம் கொண்டனர்; புரட்சி இவ்வளவு சுலபத்தில் வந்துவிடுமென்று யார் எதிர்பார்த்தார்கள்?.

ஆனல், ஆட்டம் கொடுத்த மஞ்சு சர்க்கார் அடியோடு முறிந்து விடவில்லை. யுத்தம் நடந்தது. சாங்ஷாவில்

ஓய்ச்சலில்லாத நடவடிக்கைகள்; ஊச்சாங்-ஹார்ங்கோவுக்கு உதவ துருப்புகளை அனுப்பவேண்டியதும், புதிய சிப்பாய்களைச் சேர்ப்பதும் அவசர அவசியமாகி விட்டது. உற்சாகமிக்க இளைஞர்கள் பலர் சேர்ந்து மாணவர் படையாக மாறினர். புரட்சிப் படையில் சேரவேண்டுமென்று தளராத உறுதிகொண்ட 'மா சே-துங்', மாணவர் படை மிகவும் பலவீனமாயுள்ளதென்று கருதினர். ஆதலால், பயிற்சிபெற்ற ராணுவந்தான் அவருக்கு ஏற்றதென்று கருதினர். புரட்சிக்கு உருப்படியான உதவி புரியவேண்டும் நாம். இந்த முறையில்தான் அவர் காரணங்காட்டுவார்: ஒரு புரட்சி வெற்றிபெற வேண்டுமானல் போர் புரிய வேண்டியது அவசியம். ஆகவே புரட்சிப்பணி புரிவதற்குச் சிறந்த வழி சிப்பாய் ஆவதுதான்.

அவருக்கு அப்பொழுது வயது 18 தான்; ஆனல் அந்த வயதுக்கு அதிகமான உயரமுடையவர் அவர். இந்த உயரம் இதுவரைக்கும் அவருக்குப் பாதகமாயிருந்தது; அதாவது, இதனல்தான் சியாங்சியாங் உயர்தர ஆரம்பப்பள்ளித் தலைமை ஆசிரியர் அவரைச் சேர்த்துக்கொள்ள மறுத்தார்; ஆனல் இப்பொழுது அவர் நெட்டையாக இருந்ததால்-சைனியத்திற்கு உயரமானவர்களே வேண்டியிருந்ததால், அவர் ஏற்றுக்கொள்ளப் பட்டார். இன்னும் வேலை தொடங்காத நீதி மண்டபத்திற்குள்ளே அவர் சேர்ந்துள்ள படைப்பகுதி தங்கியிருந்தது. தினசரிப் பயிற்சிகளோடு, இந்தப் புதிய சிப்பாய்கள் பலவிநோதமான, விதவிதமான காரியங்களையும் செய்யவேண்டி வந்தது. படுக்கும் பலகைகள், படுக்கை, துணிக்கூடைகள் முதலியவற்றைஅவர்களது அதிகாரிகள் புதிய இடங்களுக்குப் போகும்பொழுது அங்கு அவர்கள் சுமந்து செல்லவேண்டும். அதற்கும் மேலாக, நகரத்திற்கு வெளியேயுள்ள வெண்மணற்கிணற்றுக்கு அவர்கள் தினந்தோறும் சென்று, சமையலுக்கும், அதிகாரிகளுக்குத் தேநீர் போடவும் தண்ணீர் கொண்டு வர வேண்டும்.

தனது சக-சிப்பாய்களோடு 'மா சே-துங்' மிகவும் சுமுகமாக இருந்தார்; அதிகாரிகளுக்கும் அவர் மீது பிரியம். வீட்டுக்கோ, நண்பர்களுக்கோ கடிதம் எழுத வேண்டு

மென்ருல் அவரிடம் வருவார்கள். அவர் யாருக்கும் மாட்டேனென்று சொல்வதில்லை; நிதானமாக எல்லோருக் கும் உதவுவார். மற்ற சிப்பாய்களோடு அவர் பேசும் பொழுது, அவர்களது குடும்ப நிலைமைகளை அறிந்துகொள் ளத் தவறுவதில்லை. அவர்களிற் பெரும்பாலோர் நல்ல, யோக்கியமான விவசாயிகள் என்று அவர் கண்டார். அவர் களிற் சிலர் சுரங்கத் தொழிலாளிகள், கொல்லர்கள், இதர தொழில்கள் செய்பவர்கள் என்றும் அறிந்தார். அவர்கள் எல்லோரிடத்திலும் அவர் அன்போடு பழகுவார்; அவரை அவர்கள் தங்களது "சொந்த நண்பனு"க் கருதுவார்கள். ஆனல் அதில் ஒரு புதிய சிப்பாய் திமிர்பிடித்தவனுயிருந் தான். அவனைக் கண்டால் எல்லோருக்கும் பயம்; அவனை அவர்களுக்குப் பிடிக்காது. அவனை எப்படி நடத்த வேண் டும் என்று கண்டுகொண்ட 'மா சே-துங்', தன்னிடம் அவன் அநாவசிய மோதலுக்கு வரும்பொழுதெல்லாம், எல் லோரும் கைதட்டும்படியாக அவன் மூக்கறும்படி செய் வார். 'மா சே-துங்'கை ஒதுக்கித் தள்ளிவிட அவன் ஒரு பொழுதும் துணிந்ததில்லை.

## 11. சோஷலிசத்திற்கு அவர் ஆதரவு

புது சிப்பாய்களுக்கு அப்பொழுது மாதச்சம்பளம் ஏழு டாலர்கள். பெரும்பாலான சிப்பாய்கள் தங்கள் சம்ப ளத்தை உண்பதிலும், குடிப்பதிலும், உல்லாசப் பொழுது போக்கிலும் வீணுகச் செலவழித்தனர். ஆனல், 'மா சே-துங்' மிகவும் கவனமாகத் திட்டம் போட்டு செலவு செய்வார்; உணவுக்கு 2 டாலர்; தண்ணீருக்கு கொஞ்சம் (அவர் அநேகமாக வெண்மணற் கிணற்றுக்குப் போவதில்லையாதலால் தண்ணீர் சுமந்து வந்து விற்பவர் களிடம் அவர் தண்ணீர் விலைக்கு வாங்குவார்); ஆனல் அவ ருக்கு ஒரே ஒரு விசேஷமான செலவு-சில பத்திரிகை களுக்கு சந்தா கட்டுவதுதான்.

அவர் பட்டாளத்தில் சேருமுன், மத்தியதரப் பள்ளி யில் படித்த காலத்திலிருந்தே அவருக்கு பத்திரிகை படிப்

பதில் ஆர்வம். படிப்படியாக அவர் ஒரு கைதேர்ந்த "செய்திக் குருவி" யாக உயர்ந்துவிட்டார். ஒரு வார்த்தைகூட விடாமல் பத்திரிகையின் 4 பக்கங்களையும் அவர் படித்து முடிப்பார். செய்தித்துணுக்குகள், அன்றாட நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புக்கள், பலவிதமான கட்டுரைகள் ஆகிய பல அம்சங்கள் கொண்ட பத்திரிகை யென்றால் அவருக்கு ஒரே மகிழ்ச்சி. பத்திரிகை படிப்பதன் மூலம் மிகவும் பயன்தரும் அறிவு பெற்றார் அவர். அதிலெல்லாம் முக்கிய மாக, தினசரி நிகழ்ச்சிகள், சமூகப் பிரச்னைகள் ஆகியவற்றைப் படிப்பதற்கு இது அவருக்குத் தூண்டுதலாக இருந்தது.

1911-ம் ஆண்டுப் புரட்சியால் மஞ்சு ஆட்சிக்கு சாவு மணியடிக்கப்பட்டது. அதன் பிறகு, பல்வேறு அரசியல் கருத்துக்களைக் கொண்ட கோஷ்டிகள் சுதந்தரமாகத் தலை தூக்கும் கட்டம் வந்தது. **கோமின்டாங்**காகப் பின்பு மாறிய **டுங் மெங் ஹுய்** தவிர, இதர பல அரசியல் கட்சிகள்—**சுதந்தரக்கட்சி, முற்போக்குக் கட்சி, சோஷலிஸ்ட் கட்சி** போன்றவை தோன்றின. அவற்றில் சில அற்பாயுசுகளாயின.

ஒரு நாள், ஒரு பத்திரிகையில் வெளிவந்த சோஷலிசம் பற்றிய ஒரு கட்டுரையை மா சே-துங் படித்தார். அதன் பிறகு அதே விஷயம் பற்றிய சில துண்டுப் பிரசுரங்களும் அவர் கைக்குக் கிடைத்தன. ஆனால் அவற்றிலெல்லாம், சோஷலிசத்தைப்பற்றி மேலெழுந்தவாரியாக, துண்டு துணுக்குகளாகத்தான் எழுதப்பட்டிருந்தது, ஏதோ அவர்கள் கேள்விப்பட்டிருப்பதை வைத்துக்கொண்டோ அல்லது வெளிநாட்டுப் புத்தகங்களிலிருந்து சிலவற்றை யெடுத்துத் திரட்டி எழுதியிருக்க வேண்டும் இவற்றின் ஆசிரியர்கள். அதில் ஒன்றுகூட, முழுவதையும் எடுத்துரைப்பதாகத் தெரியவில்லை ; அதில் பலவற்றில் சோஷலிச-சீர்திருத்த மனோபாவப் போக்குகள் பிரதிபலிப்பதாயிருந்தன. ஆயினும், புதுமையைக் கூர்ந்து கண்டு பிடிக்கும் உணர்வும், உண்மை யென்று தெளிந்ததை விடாப்பிடியாகப் பற்றி நிற்கும் தைரியமும் கொண்ட மாசே-துங்கிற்கு, அவைகளெல்லாம் இன்ப ஊற்றாய், ஆதர்ச அருவியாய்த் தென்பட்டன. உடனே

இதர சிப்பாய்களுடன் சோஷலிசத்தைப்பற்றி அவர் விவாதிக்கத் தொடங்கிவிட்டார்; உலக விடுதலைக்கும், மனித சமுதாய விமோசனத்திற்கும் இதுவரை கூறப்பட்டுள்ள தத்துவங்களிலெல்லாம் தலை சிறந்தது இதுவெனக் கூறத் தொடங்கிவிட்டார்.

ஒரு வருடத்திற்கு மேலாகி விட்டது டுங்ஷான் ஆரம்பப் பள்ளியை விட்டு அவர் விலகி; ஆனால் தனது பழைய நண்பர்களுடன் தவறாமல் அவர் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார், இந்தப் புதிய விஷயத்தைக் கண்டு கொண்ட ஆவேசத்தில், சோஷலிச கோட்பாடுகளைப் பற்றி அவர்களுக்கு விளக்கி எழுதி அனுப்பினர்.

* * * *

ஹூச்சாங் கலகத்தின் எதிரொலி சாங்ஷாவில்தான் முதலில் கேட்டது. அதையடுத்து **கியாங்சி, ஷென்சி, ஷான்சி, யுன்னன், கியாங்சு**, செக்கியாங், குவாங்டங், குவாங்சி, பூக்கியான், ஷான்டங், ஜெக்குவான், வெய்ச்சோ, கான்சு, சிங்கியாங் மாகாணங்களனைத்தும் ஒவ்வொன்ருக விடுதலைப் பிரகடனம் செய்தன. ஒரு மாதத்திற்குள்ளாக, புரட்சிப்படை 17 மாகாணங்களைக் கைப்பற்றியது. இவ்வாருக, 265 வருடகாலம் ஆண்டு வந்த மஞ்சு ஆட்சி திடீரென்று கவிழ்ந்தது. ஆனால் அது சரிவதற்குமுன், இறுதிப் போராட்டம் ஒன்றை அந்த மஞ்சு ஆட்சி நடத்திப்பார்த்தது; புரட்சி வேகத்தைத் தணிப்பதற்காக சில சமரச நடபடிக்கைகளை செய்து பார்த்தது; அதாவது 19 அம்ச அரசியல் திட்டம் ஒன்றை வெளியிட்டது; ஏகாதிபத்திய அதிகாரத்தைப் பெரிய அளவுக்குக் குறைக்க யுவான்ஷி-காய் என்பவரைப் பிரதமராகக் கொண்டு ஒரு மந்திரி சபையை அமைக்க முற்பட்டது. ஆனால் பிற்போக்குடைய பெரும் நிலச்சுவான்தார்கள், தரகு முதலாளிகள் ஆகியோரின் தலைவனுன யுவான்ஷி-காய் தங்களுக்குத் துரோகம் செய்வானென்று மஞ்சுக்கள் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. அவன் ஆதிக்கத்திலிருந்த வட சைனியத்தைக் கொண்டு, சகல அரசாங்க அதிகாரங்களையும் யுவான்ஷி-காய் கைப்பற்றினன். கைப்பற்றிக் கொண்டதும், அப்பொழுதுதான் அரும்புவிட்டு,

துளிர்த்திருந்த புரட்சியின் லட்சியத்திற்கு பலமான அடிகொடுக்க அவன் முனைந்தான்; அதற்காக வூச்சாங்-ஹாங்கோ மீது தாக்குதல்களைத் தொடுத்தான்; ஹாங்கோவுக்கு எதிரிலுள்ள ஹான்யாங்கைக் கைப் பற்றினன்.

என்ன வந்தாலும் நாங்கிங் நகரை கடைசிவரை கைவிடுவதில்லையென்று கூறியிருந்த சாங்ஸூன் (1855-1923; யுவான் ஷி-காய் கீழிருந்த வடபிராந்திய *தனிக்காட்டு ராஜாக்களில் ஒருவன்) முறியடிக்கப்பட்டான். மக்கள் சைன்யம் (முன்னர் புதிய சைன்யம்) நாங்கிங் நகருக்குள் பிரவேசித்தது; ஷாங்காயில் புரட்சித் தலைவர்களால் கூட்டப்பட்ட சகல மாகாண கவர்னர்களின் பிரதிநிதிகளின் கூட்டு மகாநாடு, வூச்சாங்-ஹாங்கோவில் சிறிது நடத்தப் பட்டு பிறகு நாங்கிங்கில் நடத்தப்பட்டது. "சீனக் குடியரசின் தற்காலிக சர்க்கார்" ஒன்று நிறுவப்பட்டது; அதற்கு சன்யாட்-சென் ஜனதிபதி; மிகப்பிரபலமான "தற்காலிக அரசியல் திட்டம்" வகுக்கப்பட்டு பிரகடனம் செய்யப் பட்டது.

இதற்குள்ளாக முதலாளித்வ நாடுகளிலுள்ள தொழிலாளி வர்க்க ஸ்தாபனங்களும், தொழிலாளி வர்க்க இயக்கங்களும் மகோன்னத பலம்பெற்று வளர்ந்துவிட்டன. 1845-ல் **மார்க்சிசம்** உதித்தது என்பதையும், 1864-ல் **முதல் இன்ட்டர்நாஷனல்** நிறுவப்பட்டது என்பதையும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். சீனமக்களின் இடையருத போராட்டத்தினல், சீன முதலாளித்வம் பிறந்ததோடேயே சீனத் தொழிலாளி வர்க்கமும் உதயமானது. ஆனல் அந்தக் கட்டத்தில் சீனத் தொழிலாளி வர்க்கம் மிகவும் பலவீனமாயிருந்தது; இனிமேல்தான் அது

---

* Warlords—சீனவில் நிலப்பிரபுக்களா யிருந்துகொண்டு, தங்கள் பிரதேசங்களில் சகலவிதமான நீதி, நிர்வாக அதிகாரங்களை தாங்களே வைத்துக்கொண்டு விவசாயி மக்களைக் கொடுமைப் படுத்தும் கூட்டத்தாரை **தனிக்காட்டு ராஜாக்கள்** என்று குறிப்பிட்டுள்ளோம் (மொ-ர்)

ஒரு சுயேச்சையான அரசியல் சக்தியாக வளர வேண்டி யிருந்தது.

விவசாயிகள், கைத்தொழில் செய்பவர்கள், குட்டி பூர்ஷ்வாக்கள், பூர்ஷ்வா படிப்பாளிகள், இதர புரட்சிகர மான சக்திகள் அனைவரும் இன்னும் ஸ்தாபனரீதியாகத் திரளவில்லை; அவர்களது அரசியல் உணர்வோ அரிச்சுவடி அளவில்தானிருந்தது. அதை நடத்தியவர்கள், அதில் கலந்து கொண்டவர்கள், அல்லது தார்மீகரீதியில் புரட்சியை ஆதரித்தவர்கள் ஆகிய அனைவரும் பல்வேறுவிதமான சமூக அந்தஸ்தைச் சேர்ந்தவர்கள்; பல்வேறு நோக்கங் களைக் கொண்டவர்கள். ஆனால், "மஞ்சு-போக்கு-எதிர்ப்பு" ஒன்றுதான் அவர்கள் எல்லோரும் ஒத்துக் கொள்ளும் பொதுநோக்கமாக இருந்தது. அதை நீக்கி விட்டுப் பார்த்தால், பல்வேறு நேர் விரோதமான நோக்கங் களும், முரண்பாடுகளும் இருந்தது நன்கு தெரிந்தது. இம் மாதிரி புரட்சி அணி பலஹீனமாகவும், ஸ்தாபன ரீதியற்ற தாகவும் இருந்ததால்தான் நிலச்சுவான்தார் வர்க்கம், தரகு முதலாளி வர்க்கம், தனிக்காட்டு ராஜாக்கள், அதிகார வர்க்க வெறியர்கள் ஆகியோர் கைகளில், புரட்சியினால் ஏற் பட்ட "பலன்கள்" சிக்குண்டதில் ஆச்சரியமெதுவும் இல்லை. இந்த சக்திகளின் பிரதான பிரதிநிதியான யுவான்ஷி-காய், புரட்சியை தனக்குச் சாதகமாகத் திருப்பி விடும் தந்திரத்தைக் கையாண்டு அதில் பிரமாத வெற்றி யும் அடைந்தான்.

ஹூனானின் நிலைமையும் மாறிவிட்டது. டான் என்-காய் (1876-1920; பிற்போக்கு கோமின்டாங் ஆட்சியில் உயர்ந்த பதவிக்கு வந்தவன்) கவர்னரானான். கே லாவ் ஹூய்யின் இரு பிரபல தலைவர்களான சியோ டா-பெங் கும் சென் சோ-சின்னும் கொலை செய்யப்பட்டனர்; இந்த இருவரும் கலகத்தை ஏற்படுத்துவதில் பெரிதும் உதவினார் கள். புரட்சிக்குப் பெரிதும் உதவியாக இருந்த பொறுப் பான தலைவர்களும், அதை ஆதரித்தவர்களும் யுவான்ஷி-காயுடன் பேரம் பேச ஆரம்பித்தார்கள். புரட்சி ஏற் கனவே "நிறைவேறி விட்டது" என்ற பிரமையில், வட பிராந்தியத்திற்கும் தென் பிராந்தியத்திற்கும் இடையே

சமாதானம் நிலவ வேண்டுமென்றும், அதன் மூலம் மீண்டும் சீனுவில் ஒற்றுமை நிலவுமென்றும் கூற ஆரம்பித்தனர். யுவான்ஷி-காய்க்கு எல்லாவற்றிலும் அவர்கள் விட்டுக் கொடுத்தனர்; மஞ்சு சக்கரவர்த்தி முடி துறப்பதற்குப் பிரதியாக சன்யாட்-சென் ஜனுதிபதி பதவியை யுவான்ஷி-காய்க்கு விட்டுக் கொடுக்கவேண்டும்; நாங்கிங் சர்க்காரைக் கலைத்துவிட வேண்டும்; சீனக் குடியரசின் தலைநகர் பீகிங்கிலேயே இருக்கவேண்டும்......இந்த நிபந்தனைகளுக்கு சன்யாட்-சென் ஒத்துக்கொள்ளவில்லை; ஆனுல் அவரைத் தனிமைப்படுத்தி விட்டார்கள்; ஏனென்ருல் புரட்சிக் கட்சியின் பெரும்பான்மையான அங்கத்தினர்கள், எப்படியாவது "ஏற்றம்பெற" வேண்டும், பணம் பெருக்கவேண்டும் என்ற ஆசையில் நிபந்தனையற்ற சமரசம் செய்து கொள்ளவும், "சுமுகமாகவும்", "ஒற்றுமையாகவும்" போகவேண்டுமென்று முயன்றனர்.

1911-ஆம் ஆண்டுப் புரட்சி ஒரு தோல்வியே என்று சன்யாட்-சென் பின்னர் ஒத்துக்கொண்டதாகக் கூறப்பட்டது. ஒருவிதத்தில் புரட்சி தோற்றது என்று கூறுவதுதான் பொருந்தும் என்று சொல்லலாம். ஆனுல் உலகத்திலேயே மிகப் பழமையான சுயம்பிரகாசமான கோனுட்சியைக் கவிழ்ப்பதிலும், சீன மக்கள்மீது மஞ்சுக்கள் பிணைத்திருந்த தளைகளை உடைத்தெறிவதிலும் இது வெற்றி பெற்றது என்று கூறுவதும் பொருந்தும். ஏகாதிபத்தியத்தையும், நிலப்பிரபுத்வத்தையும் எதிர்த்தும், தேச விடுதலை, சுதந்தரத்தைப் பெறவும் நடந்த போராட்டத்தில் முதல் வெற்றியடைந்த ஒரு ஜனநாயக இயக்கம் இது என்ற முறையில், சீன சமுதாய அபிவிருத்தியிலும், உலக கலாச்சார வளர்ச்சியிலும் சரித்திரத்தில் பொறிக்கப்படும் ஒரு முக்கிய மைல் கல்லாகும் இது.

வட பிராந்தியம், தென் பிராந்தியத்திற்கிடையே சமாதானம் ஏற்பட்டது; சீனு "ஒன்று படுத்தப்"பட்டது. ராணுவத்திலிருந்து தன்னை விடுவிக்க வேண்டுமெனக் கேட்பதென்று மா சே-துங் முடிவு செய்தார். அவர் சைனியத்திலிருந்து விலகப் போகிருர் என்ற பேச்சுப் பிறந்ததும், சைன்யத் தளபதியும், படைத் தளபதியும் அவ

ரிடம் வந்து சைன்யத்தில் இருக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். "நீங்கள் ஒரு சிப்பாயாக இருந்தால் ரொம்ப தூரம் முன்னேறலாம்" என்று அவர்கள் கூறினர்; அதாவது அவர் சுலபமாக முன்னேற முடியும், பணம் சம்பாதிக்க முடியும் என்ற கருத்தில் அவர்கள் கூறினர். ஆனால் மா சே-துங் விலகுவதென்று உறுதிகொண்டு விட்டார். சேனையிலிருந்து விலகி, விட்ட படிப்பைத் தொடர்ந்து படிக்க அவர் பள்ளிக்கூடம் திரும்பினர். அதே சமயத்தில், சாதாரண ரீதியில் சமூக சேவை செய்வதிலும் அவர் நாட்டங் கொண்டார்.

## அத்தியாயம் III

## கல்விபெறக் கருத்தூன்றிப் படித்தார்

### 12. திக்குத் தெரியாத சாங்ஷா வீதியிலே

தொடர்ந்து படிப்பதென்று உறுதி பூண்ட மா சே-துங், பள்ளிக்கூட விளம்பரங்கள் வருகிறதாவென்று பத்திரிகைகளைப் புரட்டுவார். பலவிதமான பள்ளிக்கூட விளம்பரங்கள்—போலீஸ் அதிகாரிகள், சோப்பு செய்பவர்கள் ஆகிய பயிற்சிப் பள்ளிகள், சட்டப் பள்ளிகள், வர்த்தகப் பள்ளிகள் போன்றவைபற்றி வெளி வந்தன. ஏதோ தண்டத்திற்காக, ஐந்து ஆறு பள்ளிகளுக்கு பள்ளிக்கு ஒரு டாலர் வீதம் கட்டி விண்ணப்பம் செய்தார். தன்னைப் போன்ற இளைஞர்களின் மனதைக் கவருவதற்காகத்தான் பெரும்பாலான விளம்பரங்கள் எழுதப்பட்டிருந்தன; ஆனால் அவரது நண்பர்களிடமிருந்தும் அவருக்குப் பல உற்சாக மூட்டும் கடிதங்கள் வந்தன. ஒருசமயம், "தேசத்தை வளப்படுத்தவும், மக்களுக்கு வாழ்வளிக்கவும்" சோப்பு செய்பவராக ஆகிவிடலாமா என்று அவர் தீவிரமாக யோசித்தார். தேசத்தின் பொருளாதாரத்தை நிர்மாணிப்பதற்கு உதவிகரமாக ஒரு வழக்கறிஞர், ஒரு நீதிபதி அல்லது ஒரு பொருளாதார அறிஞராக ஆகலாமா என்றும் அவர் நினைத்ததுண்டு. கடைசியாக ஒரு வர்த்தகப் பள்ளியில் அவர் சேர்ந்தார். இது ஒரு மாகாணப் பள்ளி: அதில் நல்ல பாடங்களும், நல்ல ஆசிரியர்களும் உண்டு. விண்ணப்பம் போட்ட அதே சமயத்தில் இதைப்பற்றி அவரது அப்பாவுக்கும் எழுதினர். தன் மகனுக்கு வர்த்தகம்தான் லாயக்கு என்று எப்பொழுதும் கருதி வந்த அவர் தந்தை உடனடியாக அதை ஒப்புக் கொண்டார்- அதற்கு முன்னலேயே ஒரு அரிசி மண்டியில் அவரை வேலே பழகப் போகும்படி அவர் சொன்னரல்லவா? அப்பொழுது வழக்

கம்போல, பெரும்பாலான பாடங்கள் ஆங்கிலத்தில்தான் சொல்லிக் கொடுக்கப்பட்டன. அப்பொழுது சேர்க்கப் பட்ட இதர பல மாணவர்கள் போலவே, மா சே-துங்குக் கும் ஆங்கிலம் தெரியாது. ஆகவே ஒரு மாதத்தில் அங் கிருந்து அவர் விலகினுர்.

மீண்டும் விளம்பரங்களைத் தேடிப்பார்த்து, முதலா வது மாகாண மத்தியதரப் பள்ளிக்கு விண்ணப்பித்துக் கொண்டார், பிரவேசப் பரீட்சைகளில் அவர் முதன்மை யாகத் தேறினுர். இத்தகைய ஆற்றலுடைய இந்தப் புதிய மாணவரிடத்தில் பள்ளித் தலைமை ஆசிரியரும், மற்ற ஆசிரியர்களும் மதிப்பு வைக்கத் தொடங்கினர். இந்தக் கட்டுரையை இவரேதான் எழுதியிருக்கக்கூடுமா என்று கூட அவர்கள் சந்தேகித்தனர். அவர்கள் முன்னிலையில் அவருக்கு மற்றொரு பரீட்சை கொடுக்கப்பட்டது; அதிலும் அவரது ஆற்றலை மெய்ப்பித்தார். எல்லோருக்கும் ஒரே வியப்பு; மாசே-துங் முதல் மத்தியதரப் பள்ளியில் சேர்ந் தார். அங்கு வைக்கப்பட்டுள்ள பாடங்கள் சுருக்கமாகவும், மேலெழுந்தவாரியாகவும் இருப்பதைக் கண்டார். திருப்தி கொள்ளாமல், 6 மாதம் தான் அங்கு காலங்கழித்தார்.

ஆனுல், அந்தப் பள்ளியின் சீன ஆசிரியர் ஒருவர் மாசே-துங்கிற்குப் பல உதவிகள் புரிந்தார், இந்தப் புதிய மாணவருக்கு இலக்கியத்தில் கருத்து இருப்பதை உணர்ந்த அந்த ஆசிரியர், "சரித்திரக் கண்ணுடி" என்ற தொகுப்பு நூல்களை இரவலாகக் கொடுத்தார். மாசே-துங் அவற்றை மிகவும் ரசித்தார். படிப்படியாக அவர் ஒரு முடிவுக்கு வந்தார்; அதாவது, தானுகவே படித்துக் கற்பதன் மூலம், ஒரு சாதாரணப் பள்ளியில் படித்தறிவதைவிட அதிகமாக இல்லாவிட்டாலும் அந்த அளவுக்கு அறிந்துகொள்ளலா மென்று முடிவு கட்டினுர். ஆகவே, தானுகவே படிப்பதற் கான ஒரு பாடக் குறிப்பை அவர் தயார் செய்தார்.

## 13. சுய-முயற்சியில் கல்விப் பயிற்சி

சாங்ஷா நகரத்தின் உயர்ந்த இடமான டிங் வாங் டாய் அவ்வளவு உயரமான இடம் என்று சொல்லிவிட முடியாது.

அதன் உச்சியிலிருந்து பார்த்தாலும் கண்ணுக்கினிய தோற்றத்தைக் காணமுடியாது. ஆனால் அதன் உச்சியில் உள்ள ஒரு கட்டிடத்தை நூல்நிலையமாக்கியிருந்தார்கள். அதன் முதல் மாடியில் சீனப் புத்தகங்களும், அந்நிய நாட்டுப் புத்தகங்களும் ஒரு அறையில் வைக்கப்பட்டிருந்தன, ஹூனனில் உள்ள முதல் மாகாண நூல்நிலையம் இதுதான். சிறிது காலத்திற்கு முன்னரே இந்த நூல் நிலையம் பொது மக்களுக்குத் திறந்து விடப்பட்டதால், ஒரு சிலர்தான் தவறாமல் அங்கு வந்து படிப்பார்கள்; அங்கு தினந்தோறும் ஒருவர்மட்டும் தவறாது வந்து படிப்பதைக் காணலாம்.

ஒவ்வொரு நாளும், நூல்நிலையம் திறக்கப்பட்டதும் நேரம் தவறாமல் ஒரு உயரமான, சாதாரண உடையணிந்த ஒரு இளைஞர் சாவகாசமாக நடந்துவந்து அதில் நுழைவார். தனக்கு வேண்டிய புத்தகத்தைத் தேடியெடுத்துக் கொண்டு நூல்நிலையத்திலுள்ள ஒரு மேஜையருகில் அமர்ந்து இடைவிடாமல் படித்துக்கொண்டேயிருப்பார் மூடும் நேரம் வரும்வரை. இவ்வாறே தினந்தோறும், வெயிலோ மழையோ என்று பாராமல் அவர் படித்து வந்தார். இந்த இளைஞர் வேறு யாருமல்ல, மாசே-துங்தான், சிந்தையைச் செலுத்தி மிகக் கவனமாக அவர் படித்தார்; நண்பகலில் சிறு இடைவேளையின் போதுமட்டுந்தான், அவர் படிப்பை நிறுத்தி வைத்து, வெளியே போய் பசியைப் போக்கச் சிறிது களியோ, முட்டை ரொட்டியோ சாப்பிட்டு விட்டு வருவார். நூல்நிலையத்திற்குள் கால்வைத்த நேரத்திலிருந்து,—இந்தக் காலத்தை அவர் நினைக்கும்போது அவர் கூறும் வாக்கியங்களிலேயே சொன்னால்—"காய்கறித் தோட்டத்திற்குள் அவிழ்த்துவிட்ட காளைபோல" அவர் தோன்றினர். அவர் எதையும் படித்து கிரகித்துவிடுவார்; நான்கு பிரதான பகுதிகளாகப் பிரிக்கப்படும் சீனப் புத்தகங்கள்—இதிகாசம், சரித்திரம், தத்துவ சாஸ்திரம், பன்னூல் திரட்டு; வெளி நாடுகளின் சரித்திரம், பூகோளம், தத்துவ சாஸ்திரம், இலக்கியம்...அந்தக்கால கட்டத்தில் அவர் படித்த நூல்களாவன: ஆடம் ஸ்மித் எழுதிய **தேசங்களின் செல்வம்**, சார்ல்ஸ் டார்வின் எழுதிய **உயிர்களின் தோற்றம்**, தாமஸ் ஹக்ஸ்லி எழுதிய **பரிணாமவாதமும்**

அறங்களும், ஜே. எஸ். மில் எழுதிய **தர்க்க சாத்திரமுறை**, ஹெர்பர்ட் ஸ்பென்சர் எழுதிய **சமூகஇயல் பற்றிய ஆராய்ச்சி**, மோன்ட்டெஸ்க்யூ எழுதிய **சட்டத்தின் சாரம்**, ஜீன்- ஜாக்ஸ் ரூஸோ எழுதிய நூல்கள், புராதன **கிரேக்க, ரோம** இதிகாசங்கள். சுருங்கச் சொன்னல், சீனவில் மொழி பெயர்க்கப்பட்ட பிரபலமான நூல்களில் ஒன்றையும் அவர் படிக்காது விடவில்லை.

அந்த நூல்நிலைய சுவரில் மாட்டப்பட்டுள்ள ஒரு பெரிய உலகப் படம் அவருக்கு மிகவும் பிடித்தமானது. அதன் வழியாக மாசே-துங் போகும்போதெல்லாம், மிகவும் ஆவலோடு அதைக் கூர்ந்து பார்க்க அவர் தவறுவதேயில்லை.

நூல்நிலையத்தில் பகல் நேரத்தை முழுவதும் கழித்து விட்டு மாலையில் அவர் ஜாகைக்குத் திரும்புவார். இம்மாதிரி கஷ்டமான, கல்வி கற்கும் வாழ்வு 6 மாதகாலம் நடந்தது. தன் வாழ்நாளில் மிகவும் விலையுயர்ந்ததில் ஒன்ருகக் கருதப் படும் அந்தக் காலகட்டத்தில், மிகவும் பயன்தரும் கல்வி யறிவு பெற்ருர் அவர்.

ஒரு பள்ளியில் சேர்ந்து ஒழுங்காகப் படிக்காமலும், ஒரு வேலையும் பார்க்காமலும் இருந்த இந்த இரண்டும் கெட்டான் நிலை, அவரது குடும்பத்தாருக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அவருக்கு அனுப்பி வந்த பணத்தை நிறுத்தி விட்டனர். அவர் கையிலிருந்த பணம் கரைந்துவிட்டது; வாடகையும், சாப்பாடும் கொடுத்து அங்கு இனி இருக்க முடியாது என்ற நிலைமை ஏற்பட்டதும், தங்குவதற்கான மற்ருெரு இடத்தை அவர் தேட முனைந்தார். வாத்தியார் வேலை பார்க்கலாமா என்று எண்ணினுர். ஒரு நாள் கீழ்க் கண்ட விளம்பரத்தை ஒரு பத்திரிகையில் பார்த்தார் :

> **ஹூனனில் ஆரம்ப முதல்தரப் பள்ளி**
> **சம்பளமும், ஜாகையும் இலவசம்**
> **பட்டம் பெற்றதும் கல்வித்துறையில் வேலை**
> **கல்விதான் ஒரு நாட்டின் அடிப்படை...**

மாசே-துங்குக்கு ஒரே மகிழ்ச்சி. அவர் வீட்டுக்கு எழுதிய கடிதத்திற்கு உற்சாக மூட்டும் பதில் வந்தது.

பரீட்சை எழுதினர்; பள்ளியில் சேர்த்துக்கொள்ளப்பட்டார்.

## 14. பாண்டித்தியமும், விசேஷத் தெளிவும்

மியா காவ்பெங் என்ற குன்றின் அருகிலுள்ள சாங்ஷாவின் தெற்கு வாசலுக்கு வெளியே ஹூனனில் ஆரம்ப முதல்தரப் பள்ளி கட்டப்பட்டிருந்தது. சீன மக்களின் ரட்சகரான மாசே-துங் இங்கேதான் 5 வருடகாலம் பட்டம் பெறும்வரை படித்தார். பல விஷயங்களை அவர் இங்கு கற்றுணர்ந்தார்; இந்தப் பள்ளியில்தான் பொது ஜன நடவடிக்கைகளில் அவருக்கு முதல் அநுபவம் ஏற்பட்டது. அவரது அரசியல் மனோபாவம் ஒரு திடமான உருவம் பெற்றது; அந்தக் கால கட்டத்திலேயே, ஸ்தாபன வேலையில் நிபுணர் என்றும், மக்களின் தலைவர் என்றும் அவர் வெளிப்பட்டார். இந்தப் பள்ளியில்தான், அவரது பள்ளித் தோழர்கள் பலரை அவர் ஒன்று சேர்த்தார்; அவர்களைத்தான் பின்னர் அவர் புரட்சி இயக்கத்தின் முதுகெலும்புகள் போன்றவர்களாக உருவாக்கினர்.

ஈ வகுப்பில் மாசே-துங் சேர்க்கப்பட்டார். எப்பொழுதும்போல் கஷ்டப்பட்டுப் படிக்கும் அவர், சுயமாகப் படிக்கும் வழக்கத்தைக் கைவிடாமல், சளைக்காமல் படிக்க ஆரம்பித்தார். அவரது திறமையும், படிப்பதில் அவருக்கிருந்த அக்கறையும், அவரது வெள்ளையான, பணிவு நிறைந்த, இன்பமூட்டும் நடத்தையும் சகலருடைய பாராட்டுதலையும் பெற ஏதுவாயிற்று. அவர் எழுதுவதெல்லாம், பள்ளியிலுள்ளவர்களால் மிக முக்கியத்துவம் வாய்ந்தவையென்று கருதப்பட்டன. ஒவ்வொரு தடவையும் அவர் எழுதும் புதியது எதையும், பள்ளி அதிபர் காரியாலயத்திற்கு எதிர்ச் சுவரில், ஆசிரியர் ஒட்டுவார்; வகுப்பு முடிந்ததும் அதைப் படிப்பதற்கு அங்கு திரளாகக் கூடிவிடுவார்கள். தனது சொந்த சாதுர்யத்தில்மட்டும் மாசே-துங் நம்பிக்கை வைக்கவில்லை. அத்தகைய பாராட்டினல் தனது தலை கனக்கும்படியான அளவுக்கு அவர் நடப்பதில்லை.

அதற்குப் பதிலாக, அறிவை மேலும் மேலும் பெறவேண்டு மென்ற அடங்கா ஆவலில், ஓய்ச்சல் ஒழிவில்லாமல் அவர் படித்து வந்தார், மாலையில் படிக்கும் நேரம் மிகவும் சொற்பமாக இருந்ததால், படுக்கும் விடுதியிலும் அவர் தொடர்ந்து படிப்பார். பள்ளிக்கூடத்து விளக்குகளை எல்லாம் அணைப்பதற்கு சங்கு ஊதப்பட்டதும், அவர் ஒரு விளக்கை ஏற்றி, ஓரு மூங்கிற்கழியினால் அதைத் தூக்கி வைத்துக்கொண்டு படுக்கையிலிருந்தவண்ணம் படித்துக் கொண்டிருப்பார். அடிக்கடி இரவு முழுவதும் அவர் படிப்பார்.

வகுப்புகளுக்கு மாசே-துங் தவறாமல் போவார்; பிரத்யேகமாகப் படிப்பதற்கு ஏற்ற ஒரு பாடத்தை அவர் வகுத்துக் குறித்து வைத்திருந்தார். ஒரு சிக்கலான பிரச்சினை யென்று அவருக்குப் பட்டதும், அதில் தனது முழு கவனத்தையும் செலுத்துவார்; அதற்காக வகுப்புப் பாடங்கள் உள்ளிட்ட இதர சகல வேலைகளையும் ஒதுக்கி வைத்துவிடுவார். சமூக விஞ்ஞானம் அவருக்கு மிகவும் பிடித்தமான பாடம்; அநுபவத்திற்கு ஒவ்வாதது, பயனற்றது என்று கருதும் இதர பாடங்களையெல்லாம் அவர் ஒதுக்கிவிடுவார். இது அவருக்கு இயற்கையே; ஏனென்றால், சமூக, அரசியல் பிரச்சினைகள்தான் அவருக்கு விசேஷமாகப் பிடித்தவையாகும்.

இயற்கை சாஸ்திரத்துக்கு அதிக நேரம் செலவழித்து அவர் படித்த காலமுண்டு. இயற்கை சாஸ்திரத்தையும் மார்க்சிசத்தையும் வேறு வேறாகப் பிரிப்பது தவறு என்று அவர் கருதியதால் அதை அவர் படித்தார், தனக்கு உண்மையில் பிடித்தமான விஷயங்களில் கருத்தைச் செலுத்துவதுதான் அன்று அவரது போக்காயிருந்தது. அவர் பிரதானமாகப் படித்தவற்றில் சீன சரித்திரமும் ஒன்று, சீன சரித்திரம்பற்றிய பழைய, புதிய புத்தகங்கள் அனைத்தையும் அவர் ஒருமுறை ஒன்றாகத் திரட்டி வைத்துக் கொண்டு, முறையாக ஒவ்வொன்றாகப் படித்து முடித்தார். குறிப்புகள் எடுப்பதில் மிகவும் கவனம் கொண்டவராதலால், பெட்டி நிறைய குறிப்புப் புத்தகங்கள் சேர்த்து வைத்திருந்தார்; கொட்டை கொட்டையாய் மணி மணி

யான கையெழுத்தில் எழுதப்பட்ட அந்தக் குறிப்புக்கள், துணிச்சலான, மனதிற் தைக்கும் எண்ணங்களை வெளிப் படுத்துவதாயிருந்தன,

## 15. "சூயே வென்"—கற்றபின் வினவுதல்

ஆரம்பமுதல்தரப் பள்ளியின் யாங்ஹுவாய்-சுங் என்ற பிரபல ஆசிரியர், மாசே-துங்மீதும், அவரது வகுப்புத்தோழர் கள் மீதும் நல்ல பரிச்சியம்கொண்டிருந்தார். சாங்ஷாவில் பிறந்த அவர், ஜப்பானில் 6 ஆண்டும், இங்கிலாந்தில் 4 ஆண்டும் படித்துத்திரும்பியவர். அதேசமயத்தில் புராதன சீன தத்துவ சாஸ்திரத்திலும் அவருக்கு ஞானம் இருந்தது; **சுங்** வம்சத்தைச் சேர்ந்த தத்துவ சாஸ்திரிகளின் உரை களுக்கு விளக்கம் தேடவும் அவர் விரும்பினார். **காண்ட், ஸ்பென்சர், ரூஸோ** ஆகியோரும் அவருக்கு மிகவும் பிடித் தவர்கள். ஆரம்ப முதல்தரப் பள்ளியில் அவர் சொல்லிக் கொடுக்கும் பாடங்களில்-அறநூல், தர்க்க நூல், மனோ தத்துவநூல், கல்வி, தத்துவ சாஸ்திரமும் உள்ளடங்கும். அவர் ஒரு சிறந்த பிரசங்கியல்ல; அதற்காக பிறருடைய பொறுமையைச் சோதிக்கும்படியான அளவுக்குப் பேசும் பிரசங்கியுமல்ல அவர்; அவரது பிரசங்கத்தைக் கேட்பவர் கள் மிகவும் மரியாதையுடன் கவனத்தோடு செவி கொடுப் பார்கள், அவருக்குக் கல்வியிலிருந்த ஆர்வத்தினால், கருத் தும், சிந்தனையும் நிறைந்த இளைஞர்கள் கூட்டம் அவரைச் சுற்றி நின்றார்கள்; அவர்களில் மூவர்—**மா சே-துங்**, சாய் ஹோ-ஷென்,* சென் ஸாங்† ஆவர்.

---

* சாய் ஹோ-ஷென்—ஆரம்ப முதல்தரப் பள்ளியில் படித்த மா சே-துங்கின் சிறந்த நண்பர்களில் ஒருவர். சியாங்சியாங்கில் பிறந்த வர்; அவர் ஒரு ஏழை; ஆனால் படிப்பிலே மிகவும் கருத்துக் கொண்ட வர். பின்னர் அவர் பிரான்சுக்குச் சென்று அங்குள்ள சீனத் தொழி லாளர்கள், சீன மாணவர்களிடையே கம்யூனிஸ்ட் குழுக்களை ஏற் படுத்தினார். சீனவுக்குத் திரும்பிய பிறகு, சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின்

† சென் ஸாங்-70 பக்கம் பார்க்க.

அந்த மூவரும், இன்னும் பலரும், ஞாயிற்றுக் கிழமைகளில் யாங் ஹூவாய்-சுங் இல்லத்திற்குச் சென்று அவரோடு பல பிரச்சினைகள் பற்றிப் பேசிவிட்டு வருவது வழக்கம். அந்த ஆசிரியர் இந்த மாணவர்களை அன்பாக ஏற்று, அவர்களுக்கு உதவி புரியவோ, ஆலோசனை கூறவோ தயங்குவதேயில்லை.

சரித்திரம், இலக்கியம் தவிர, தத்துவ சாஸ்திரத்திலும் மா சே-துங் கவனம் செலுத்தினர். அதை மிக உற்சாகத்தோடு அவர் படித்தார். புதிய ஞானம் பெற வேண்டுமென்று அவர் கொண்ட ஆவல் மேலும்மேலும் அவரை முன்னேறத் தூண்டியது. ஆரம்ப முதல்தரப் பள்ளியில் அவர் தங்கியிருந்த காலத்தில், பிரத்தியேகமாகப் படித்துக் கொண்டும், பள்ளிகளிலுள்ள ஆசிரியர்களைக் கலந்து கொண்டும் இருந்ததோடு, சாங்ஷா வழியாகச் செல்ல நேரும் ஒவ்வொரு "பேரறிஞரையும்" அவர் தேடிப் போவார், அவர்களிடத்தில், ஒரு மரியாதை நிறைந்த மாணவன் புதிய விஷயங்களைக் கற்றுக் கொள்ளப்போவதுபோல் அவர் நடந்து கொண்டார். கண்டு பேசி முடிந்ததும், அவரது நண்பர்களிடத்தில் அதைப் பற்றிய அவரது அபிப்பிராயங்களை, நுணுக்கமான விமர்சனக் குறிப்புகளுடன் எடுத்துக் கூறுவார்.

"சுவான்-ஷான் சங்க"த்திற்கு மா சே-துங் அடிக்கடி செல்வார்; அது சாங்ஷாவிலுள்ள ஒரு நிலையம்; மிங் வம்சத்தைச் சேர்ந்த வாங் சுவான்-ஷான் என்ற பெரும் தத்துவ சாஸ்திரியின் போதனைகள் பற்றிய விளக்க உரைகள் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை தோறும் அங்கு நடை

---

மத்திய கமிட்டிக்கு பிரச்சார வேலை செய்து, சீனப் புரட்சியின் திறமைமிக்க தலைவர் என்று காட்டினர். 1931-ல் அவர் ஹாங்காங்கில் கைது செய்யப்பட்டார். அங்கிருந்து அவர் கான்டனுக்குக் கொண்டு செல்லப்பட்டார்; அங்கே, புரட்சி-எதிர்ப்புக் கொலைவெறியர்கள் ஒரு சுவற்றில் அவரை இறகு விரித்த பறவையை அறைவது போல் அறைந்து, அடித்துக் கொன்றுவிட்டார்கள். துப்பாக்கிச் சனியனுல் பட்ட காயங்களால் அவர் மார்பு கிழிக்கப்பட்டிருந்தது.

பெறும். அந்த தத்துவ சாஸ்திரியின் கனல்கக்கும் தேச பக்தி அவரை விசேஷமாகக் கவர்ந்தது.

"சூயே வென் (கல்வி) என்ற பதம், மிகவும் அர்த்தம் நிறைந்த ஒரு பகு பதமாகும்; ஏனென்ருல் சூயே (கல்வி கற்பது) என்பதும், வென் (விஞக்கள் போடுவது) என்பதும் ஒன்றுக் கொன்று தொடர்புடையன" என்று மா சே-துங் சொல்வது வழக்கம்.

## 16 சூரியஸ்நானம், வாயு ஸ்நானம், மழைநீர் ஸ்நானம்...

யாங் ஹுவாய்-சுங், தனது மாணவர்கள் பள்ளிப் படிப்பில் அக்கறை செலுத்துவதோடு மட்டும் நிற்காமல், அவர்கள் வாழும் முறைகளிலும் அக்கறை காட்டினர். ஒழுக்கங் கெட்ட, நிலப் பிரபுத்வ வாழ்க்கை முறையை அவர் எதிர்ப்பவர்; புதிய 'ஜனநாயக, விஞ்ஞான ரீதியில் வாழவேண்டு மென்று கூறுபவர். பகல் உணவு அருந்தாமல் விட வேண்டுமென்று அவர் கூறுவார்; தியானத்தில் இருக்கவேண்டு மென்றும்' மூச்சை நன்ருக இழுத்து வெளிவிடும் பழக்கத்தை மக்கள் கைக்கொள்ள வேண்டுமென்றும், எப் பொழுதும் குளிர்காலத்திலும் குளிர்ந்த நீரிலேயே குளிக்க வேண்டுமென்றும் கூறுவார். மா சே-துங்கும், சாய்ஹோ-ஷென்னும், இதரர்களும் தங்களது இளமை உணர்ச்சியில் அவரைப் போன்று நடக்க முற்பட்டார்கள். 2 வருட காலம் அவர்கள் பகல் உணவை விட்டார்கள்.

ஒரு வருடம் கோடைகால விடுமுறையின்போது, மா, சாங், சாங் குன்-டீ என்ற மாணவர் ஆகியோர், சாங்ஷாவிற்கு எதிரிலுள்ள நதிக்கரையில், யூலு மலை உச்சியிலுள்ள ஒரு மாளிகையில் தங்கினர். அவர்கள் பகல் உணவும், இரவு உணவும் அருந்தவில்லை. அவர்களின் பிரதான உணவு, பச்சையான பெரிய மொச்சை தான். அவர்கள் ஒருவரிடமும் அதிகப்பணம் இல்லாததால் இப்படிச் சிக்கனமாக இருக்கிருர்கள் என்று அர்த்தம். காலையில் தியானம் பண்ணுவதற்கு மலையுச்சிக்குச் செல்வார்கள்; அதன் பிறகு கீழிறங்கி வந்து

குளிர்ந்த நீர்க்குளத்தில் அல்லது நதியில் குளிப்பார்கள். விடுமுறை முடியும்வரை இப்படியே நடந்தார்கள். இம் மாதிரி "விரதப் பயிற்சி"த்திட்டத்தை விடாமல் அனுஷ் டிப்பதில் அவர்கள் நம்பிக்கை வைத்தார்கள். "குளிப்பது" என்ற பதத்திற்கு சாதாரணமாக உள்ள அர்த்தத்தை—நிர் வாணமாக திறந்த உடலோடு இயற்கையுடன்—சூரியன், காற்று, கொட்டும் மழையில் இருப்பது என்று அவர்கள் விரிவுபடுத்தினர்கள். இந்தப் பழக்கங்களை, கிண்டலாக "சூரியஸ்நானம்", "வாயுஸ்நானம்", "மழை நீர் ஸ்நானம்" என்று மா சே-துங் குறிப்பிட்டார். சியாங் நதியிலுள்ள ஒரு சிறு தீவிற்கு அடிக்கடி அவர்கள் செல்வார்கள்; அங்கு நீந்துவதற்கு வசதியாயிருந்தது. இவையெல்லாம் உடலை வலிவுடையதாகக் கட்டுவதற்கு உதவுவதற்காகும்.

அவர்களது மற்றெரு பொழுது போக்கு "குரல் சாதகம் செய்தல்". குன்றுகள்மீது ஏறிச்சென்று, டாங் வம்சத்தில் உதித்த கவிகள் எழுதியவற்றை உரத்த குரலில் ஒப்பிப்பார்கள்; அல்லது நகரத்து சுவர்கள்மீது ஏறி அவர்கள் சுவாசக் குழாயை ஊதவைத்து, சீறும் காற்ருேடு போட்டியிட்டுக் கதறுவார்கள்......சில விஷயங்களில், சூரிய ஒளி, திறந்த வெளி, கொட்டும் நீர்க்குளியல் வேண்டும் என்று வற்புறுத்தப்படும் பிரபல நவீன முறைகளோடு அவர்கள் செய்யும் பயிற்சி விநோதமான முறையில் ஒத்திருக்கும்.

அந்த மாளிகையில் அவர்கள் தங்கியிருந்த காலத்தில், ஒவ்வொருவரும் ஒரு துண்டு, ஒரு குடை, சில துணிகள் மட்டுமே வைத்திருந்தார்கள். மற்றவர்கள் அணியாத ஒரு நீண்ட சாம்பல் நிற அங்கியை எப்பொழுதும் மா சே-துங் அணிந்திருப்பார்.

இரவில், திறந்த வெளியில், புல் தரையில் சுத்தமான காற்றைப் பருகிய வண்ணம் தனித்தனியாக மூலைக்கொருவராய்ப் படுத்துறங்குவார்கள். அதன் பிறகு அவர்கள் பள்ளிக்குத் திரும்பியதும், குளிர்காலம் வரும்வரை விளையாட்டு மைதானத்திலேயே அவர்கள் படுத்துறங்கி வந்தனர்.

அந்த நாட்களை நினைவுபடுத்தும்போது, அவரது குறிப்பில் ஒருமுறை கீழ்க்கண்ட வாசகத்தை மா சே-துங் எழுதினார் :

**''வானத்தை எதிர்க்கும் போராட்டத்தில், எத்தனை இன்பம் !**
**மண்ணை எதிர்க்கும் போராட்டத்தில், எத்தனை இன்பம் !''**

1920-21-இல் ''வார விடுமுறைக் கழகம்'' என்ற ஒன்றை அவர் கூட்டினார் ; அது ஞாயிற்றுக்கிழமைகளில் கூடி, சாங்ஷாவைச் சுற்றியுள்ள **தங்கத்தகட்டு மலையோரம், வெள்ளித்தகட்டு மலையோரம், குரங்குக் குன்றம்** முதலிய இயற்கைக் காட்சி ததும்பும் இடங்களுக்கு உல்லாசப் பிரயாணம் கிளம்பும். ஒரு இலையுதிர் காலத்து நடுவில் ஒரு நாள் மாலையில், நிலவொளியை ரசித்து மகிழ சியாங் நதியில் ஓடம் விட்டனர். ''ஆரஞ்சுத் தீவு'' என்று அழைக்கப்படும் அந்தத் தீவை ஒரு சுற்றுச் சுற்றி வந்து அடுத்த நாள் விடியும்போதுதான் அவர்கள் வீடு திரும்பினர்.

இந்தக் காலகட்டத்தை மா சே-துங், தான் எழுதிய ஒரு கவிதையில் சித்தரித்துள்ளார். அது ஒரு இலக்கிய சிருஷ்டியானதால், அவரது கவிதைத் திறனையும், அவரது மிக விரிந்த கற்பனா சக்தியையும், அவரது அகண்ட இரக்கச் சித்தத்தையும், உன்னதமான உணர்ச்சிகளையும் அது அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது:



'' குளிர்வாட்டும் பருவத்தில் தனியாக நின்று
பளிங்கேபோல் சியாங் நதியும் வடதிசையிற்பாய
ஆரஞ்சுத் தீவினிலே ஐயிரண்டாயிரத்து
அருங்குன்றம் செறிந்தடர்ந்த இலைகள் நிறத்தாலே
எங்குமே சிவப்பு மயமாயிருக்கக் கண்டேன் ;
இந்நதியோ மரகதம்போல் ஒளி காட்டி நிற்கும் ;
அந்நதியில் ஓடமது நூறோடக் கண்டேன்.
அடடாவோ பந்தயத்தை என்னென்று சொல்வேன்.

எல்லையற்ற பெருவெளியில் கழுகு பறந்ததுவே,
எழில் மீன்கள் கரையோரம் வந்து குவிந்தனவே-

மேகமது மூடிநின்ற வான்கீழே வாழ்வு
விதவிதமாம் வடிவத்தில் விடுதலையை நாடும்.
தனியான கோபுரத்தின் மூடியதைத் திறந்தேன்
தருகவிடை என்று ஒரு கேள்வியதைப் போட்டேன்:
மிகப் பெரிய கோளத்தில் வாழுகின்ற உயிரின்
விதியதனை நிர்ணயிப்பதாரென்று சொல்வாய்?

"தோழர் பலர் தன்னோடு மீண்டுமந்த இடத்தைப்
தொட்டுப்போய்ப் பார்த்துவிட்டு நான் வந்து
சேர்ந்தேன்,
என்னருமை நண்பரெல்லாம் இளமை எழில்ததும்ப
இதயத்தில் களங்கமொன்றுமில்லாத பருவம்
இணையற்ற உணர்ச்சியிலே கழிந்த அந்த நாளை
எண்ணிமிகப் பார்த்திட்டேன், எஃனென்று
சொல்வேன்;
தடையெதுவுமில்லாமல் வரைந்த அந்தக் கைதான்
தடதடெனச் சுதந்தரமாய் வடித்தது கற்பனையை.
நதியினையும் குன்றினையும் திசைகாட்டி நின்றோம்
நமக்குள்ளே கிளப்பியது ஜீவனுள்ள திறனை,
ஈரைந்து ஆயிரத்துக் குடும்பத்தை ஆண்ட
ஈனர்களை தூவென்று இகழ்ந்ததை என் சொல்வேன்!
சலசலென ஓடுகின்ற விசைநீர்க்கு நடுவே
சரசரென அலைமீதுதாவியே முன்னேறி
கலகலென நமதோடம் விரைந்து செல்லும்பாங்கை
கண்டபின்னும் மறந்தனையா சொல்க பதில்
சொல்வாய்?",

**(சின் யுவான் சுன் இசைக்கேற்ப எழுதியது)**

## 17. அலைந்து திரியும் அறிஞர்—சமூக விசாரணையில் புகுதல்

ஹுனான் மாகாணத்திலுள்ள பல ஜில்லாக்களைச் சுற்றிப் பார்க்க மாசே–துங் ஒரு கோடைகால விடுமுறையில் புறப்பட்டார். **சாங்ஷா**விலிருந்து புறப்பட்டு **நிங்சியாங், பிங்சியாங், லியுயாங்** ஆகியவற்றின் வழியாக நடந்து சென்றார்; நடந்தே ஐந்து ஜில்லாக்களுக்கும் கையில் ஒரு **காசு**மின்றிச்

சென்ளுர். புதிய விஷயங்களுக்காக பழைய சம்பிரதாயங் களைக் கையாளுவதில் கெட்டிக்காரரான அவர், சுருள் காகிதங்களில் வேலைப்பாடுடைய பத்திரங்களை எழுதிக் கொடுத்து ஜில்லாக்களில் சுற்றினுர்; அவருக்குத் தேவை யான செலவைச் சரிக்கட்ட இது ஒரு கஷ்டமான வேலை யாகும், ஆயினும் இதன் மூலம் ஜில்லாக்களின் மூலை முடுக்குகளுக்கும் சென்று, அவருடைய மனதைவிட்டு ஒன்றும் அகலாது நிற்கும் பிரச்சினையான விவசாயிகளைப் பற்றி அறியவும், அவர்களது பழக்க வழக்கங்களைப் புரிந்து கொள்ளவும் அவருக்கு வாய்ப்பு ஏற்பட்டது.

மற்ளுெரு கோடை விடுமுறையில், சாய் ஹோ-ஷென் னுடன், சியாங்யின், யியாங், யூச்சோ வழியாக டங்டிங் ஏரியைச் சுற்றிலுமுள்ள இடங்களுக்குச் சென்று வந்தார். சாங்ஷாவுக்கு வெளியேயுள்ள யூலூ மலையடிவாரத்தி லிருந்து அவர்கள் புறப்பட்டு, யுன்வான் ஆலயத்தின் வழி யாகச் சென்றனர்; ஆளுக்கு ஒரு குடை, அதைச் சுற்று வதற்கு ஒரு துண்டு, ஒரு ஜோடி செருப்புதான் எடுத்துக் கொண்டு போனுர்கள், அவர்கள் புறப்படுவதற்கு முன், சாய் ஹோ-ஷென் தன் தாயிடத்திலும், சகோதரியிடத் திலும் (இப்பொழுது அகில சீன ஜனநாயக மாதர் சம்மே ளனத்தின் தலைவியான ஸாய் சாங்), "நாங்கள் 2 அல்லது 3 நாட்களில் திரும்பிவிடுவோம்" என்று சொன்னுர். ஆனுல் 2 மாதம் கழித்துத்தான் அவர்கள் திரும்பி வந்தனர்.

யூலு மலையிலுள்ள சாய் குடும்பத்தாரின் வீட்டுக்கு அவர்கள் வந்து சேர்ந்ததும், தங்கள் பிரயாண அநுபவத் தைக் கூறினர்; வழியிலிருந்த கோவில்களிலுள்ள பிட்சுக் களிடத்தில் அவர்கள் எப்படி சம்பாஷித்தார்கள், ஏதாவது எழுதிக் கொடுத்து ஒவ்வொரு இடத்திலும் எப்படிக் கொஞ்சம் பணம் சேர்த்தனர் என்பதையெல்லாம் எடுத் துரைத்தனர். விவசாயிகள் முதலில் கொஞ்சம் தயங்கினர் பேசுவதற்கு; ஏனென்ருல் அலைந்து திரியும் சாதாரண அறிஞர்கள்போல அவர்கள் தோற்றம் இல்லவே இல்லை. "சோதிடம்" சொல்பவர்களாக இருக்கலாமோ" என்று சிலர் ஆருடம் கூறினர்......ஆனுல் இந்த இரு இளைஞர்களி டமும் அவர்கள் சம்பாஷிக்க ஆரம்பித்ததும், இரு கைகளா

லும் அவர்களை வரவேற்று உபசாரம் புரிந்தனர். தாங்கள் சென்ற வழிமீதிருந்த பல கிராமங்களில் நிலவிய பழக்க வழக்கங்களையும், விவசாயிகளின் வாழ்க்கை நிலைகளையும், குத்தகை விபரங்களையும், நிலச்சுவான்தார்களுக்கும் குத்தகைதார்களுக்கும் உள்ள உறவுகள், ஏழை விவசாயி களின் தேவைகளையும், வறுமை நிலை ஆகியவைபற்றியும் மாசே-துங்கும், சாய்ஹோ-ஷென்னும் விசாரித்தனர். அவர்கள் சென்ற இடமெல்லாம் விவசாயிகள் அவர்களுக்கு உணவும், தங்க வசதியும் செய்து தருவதாகக் கூறினர்; ஆயினும், அவர்கள் அநேகமாகத் திறந்த வெளியில் உறங்கி, மலைக்கிழங்கும், நாவல் பழமும் சாப்பிட்டுப் பசியைத் தணித்துக்கொள்வார்கள்.

## 18. அரசியல், விஞ்ஞானத் துறையில் சிந்தனை ஓட்டம்

ஆரம்ப முதல்தரப் பள்ளியில், மாலையில் படிக்கும் மாணவர்களுக்காக ஒரு விசேஷ மண்டபம் ஒதுக்கப்பட்டிருந் தது. அந்த இரண்டு மாடிக்கட்டிடத்தில் விளக்குகள் எரிய ஆரம்பித்ததும் மாணவர்கள் அமர்ந்து புத்தகங்களை மனப்பாடம் செய்து கொண்டிருப்பார்கள்; அங்கு வருவ தற்கு மா சே-துங் தவறமாட்டார். பத்திரிகைகளுக்கு நடுவே புதைந்துகிடப்பார்; குறிப்பாக உள்நாட்டிலும். வெளிநாட்டிலுமுள்ள அரசியல், ராணுவ நிலைமைகளைப் பற்றி ஆழ்ந்து படிப்பார். சீனாவையும், பொதுவாக உல கத்தையும் எதிர்நோக்கியுள்ள பிரச்னையைப் பற்றி உள் ளங்கை நெல்லிக்கனிபோல தெளிவாக அலசி அலசி அவர் எடுத்து விளக்குவார்.

அப்பொழுது முதல் உலக மகாயுத்தம் நடந்துகொண் டிருந்த காலம். தற்கால அரசியல், ராணுவ நடப்புகளைப் பற்றிய ஒரு வாரக்குறிப்பு வாசிப்பதைக் கேட்பதுபோல அவரது சக-மாணவர்கள் கவனமாகக் கேட்பார்கள். அவர் சகல விஷயங்களையும் விளக்குவார்; ஆஸ்ட்டிரிய-ஹங்கேரி சாம்ராஜயத்தின் பட்டத்து இளவரசன் செரஜவோ என்ற இடத்தில் எப்படிக் கொலை செய்யப்பட்டான்;

கெய்சர் 2-வது வில்லியம் எப்படி தனது படையைத் திரட்டினன்; ஜெர்மனிக்கும்—ருஷ்யாவுக்கும், ஜெர்மனிக்கும்—பிரான்சுக்கும், ஜெர்மனிக்கும்—இங்கிலாந்துக்கும் எப்படி யுத்தம் ஏற்பட்டது; வெர்டுன் போர்க்களத்தில் எப்படி மும்முரமான போர் நடந்தது; சீனுவை அடிமைப் படுத்த 21 கோரிக்கைகளைத் திணிக்கும் சந்தர்ப்பத்தை எப்படி ஜப்பான் ஏற்படுத்தியது போன்றவைகளைப் பற்றி எடுத்துரைப்பார்.

"சலித்தெடுக்கும் மனம் படைத்தவர் நீர்; நாங்களும் பத்திரிகை படிக்கத்தான் செய்கிறோம்; ஆனுல் நீர் சம்பவங்களை அலசி ஆராய்வது மாதிரி எங்களால் முடியவில்லையே; அது ஏன்?" என்று அவரது நண்பர்கள் அவரைப் பாராட்டிக் கூறுவர்.

அதற்குள் மா சே-துங் சிறந்த அரசியல் சிந்தனை படைத்தவராகிவிட்டார். அவர் விஞ்ஞான அறிவு படைத்தவர்; அலசி ஆராய்வதிலும், தொகுத்துச் சொல்வதிலும், பொதுமைப் படுத்துவதிலும், தத்துவ விளக்கம் கூறுவதிலும் ஆர்வம் கொண்டவர். தனது பள்ளிச் சிநேகிதர்களுடன் நாட்டு நடப்பைப்பற்றி விவாதிக்கும்போது, அதற்கு ஒத்த விஷயங்களை எடுத்துக்கூறி, அவைகளோடு சீன சரித்திரத்தையும், சமீபத்தில் சீனுவில் நடந்த கிளர்ச்சிகளையும் இணைத்துக் கூறுவதில் அவருக்கு மிகவும் பிரியம்.

பள்ளியில் இரண்டு பத்திரிகைகள்தான் வரவழைத்தார்கள். ஒன்று ஷாங்கையில் வெளியாவது; மற்றொன்று சாங்ஷாவில் வெளியாவது. பள்ளி மாணவர்களின் எண்ணிக்கைக்கு இந்தப் பத்திரிகைகள் போதாது. மா சே-துங் சொந்தமாக ஒரு பத்திரிகை வரவழைத்தார். கவனமாகப் படித்து முடித்துவிட்டு எழுதாத அதன் ஓரங்களைக் கத்தரித்து எடுத்து அவைகளை ஒன்ருகத் திரட்டி முடிந்து வைப்பார். இந்த நீளமான காகிதத்துண்டுகளில், பத்திரிகைகளில் காணப்படும் பூகோளப் பெயர்கள் அனைத்தையும் குறித்துக் கொள்வார்; அதன் பின்னர், பூகோளப் படத்

தின் உதவியால் அவைகளை ஆங்கிலத்தில் எழுதுவார். அவரது நண்பர்கள் சில சமயம்:

"அங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்?" என்று கேட்பார்கள்.

"ஆங்கிலத்தில் எழுதப்பழகுகிறேன்; உலகிலுள்ள சகல முக்கியமான நகரங்கள், துறைமுகங்கள், கடல்கள், நதிகள், மலைகள் ஆகியவற்றை மனனம் செய்யப் போகிறேன். பத்திரிகைகள் நிகழ்கால சரித்திரத்தின் கண்ணுடியாக இருப்பதால் அதன் மூலம் எனது பொதுஅறிவைப் பெருக்கிக் கொள்ளப் போகிறேன்" என்று பதில் கூறுவார்.

சிலநேரம் அவர் ஒரு பத்திரிகையை எடுத்துக்கொண்டு அதில் பல மணிநேரம் செலவழிப்பார். சீன பூகோளப் படத்தையும், உலக பூகோளப் படத்தையும் பரப்பி வைத்துக்கொண்டு, ஒவ்வொரு இடத்தின் பெயரையும் உற்று நோக்குவதென்று ஒரு முடிவு செய்தார். அவருக்கு அபார ஞாபக சக்தி; ஒரு இடத்தின் பெயரை யாராவது கூறினுல், அது சீனுவில் எந்த மாகாணத்தில், எந்த ஜில்லாவில் இருக்கிறது, அல்லது எந்த வெளிநாட்டில் எங்கு இருக்கிறது என்று அவர் உடனே சொல்லி விடுவார். ஷாங்கை, பீகிங், சாங்ஷா பத்திரிகைகளை அவர் மிக நுணுக்கமாகப் படிக்கும் வழக்கம், சிங்கங்ஷான்னில் புரட்சிப் போராட்டத்தை நடத்த முற்பட்டவரைக்கும் இடையருது நடந்து வந்தது.

பூகோளத்தை விசேஷமாகப் படிப்பதற்கு, சரித்திரத்தை அவர் படிப்பதற்குக் கையாண்ட அதே முறைகளைக் கைக் கொண்டார்—விஷயத்தின் சாரத்தை கிரகித்தார்; பலவிதமான விபரங்களை சேகரித்தார்; ஆனுல் ஒரே தாவாகத் தாவி விடுவதில்லை. அந்தத் துறையில் தேர்ச்சியும், திறமையும் பெறும்வரை அவரது முயற்சிகளைக் கைவிடுவதில்லை.

இம்மாதிரி இடைவிடாமல் அறிவைப் பெருக்கும் குணும்சம், இளமையிலிருந்து மா சே-துங்கிற்கு அமைந்

தது; கற்று ஆராய்வதற்கு அவர் கைக்கொண்ட எண்ணற்ற முறைகளால், அவர் ஒரு தேர்ந்து தெளிந்த கல்விமானாக உயர்ந்தார்.

உலக சரித்திரத்தின் மகா மேதைகளான **மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின், ஸ்டாலின்** ஆகியவர்களைப் போல, **மா சே-துங்கும்** ஒரு மாபெரும் புரட்சித்தலைவர்; பிரச்சாரகர், ஸ்தாபன வேலை அறிந்தவர், சிப்பாய் ஆவர்; அதெல்லாவற்றையும்விட ஞானம் நிறைந்தவர்.

# அத்தியாயம் IV

## "ஸ்தாபன வேலைகளில்" இறங்குதல்

### 19. ஸ்தாபன வேலையில் மேதை

ஆரம்பமுதல்தரப் பள்ளியில் படித்த அவரது பள்ளித் தோழர்கள், மா சே-துங்கின் பல அற்புத குணங்களைக் கண்டு வியந்து மரியாதை காட்டினர். அவரது அக்கறையான படிப்பும், பொது நடத்தையும், அவரது எண்ணங்களும், அபிப்பிராயங்களும், அவரது முன்கையெடுக்கும் குணமும், முன்னேற்றமும், அவரது கம்பீரமான ஆனால் அடக்கமான தோற்றமும், அவரது சுமுகமான ஆனால் உறுதியான செயல் முறைகளும் மனமாரப் பாராட்டப்பட்டு பின்பற்றப்பட்டன. அவரால் ஆகர்ஷிக்கப்பட்டவர்கள் ஒரு சில மாணவர்தான்; அவர் உதாரணத்தைப் பின்பற்றி, சலியாமல் உழைத்து முன்னேற வேண்டுமென்று முயல்பவர்கள் அவர்கள். நேர்மையானவர்களிடையே அவர் மனம்விட்டு வெள்ளையாகப் பழகுவார். விஞ்ஞானம், இலக்கியம், தனியான குணங்கள், நாட்டு நிகழ்ச்சிகள் பற்றி அவர் பேசுவார்; ஆனால் தனி நபர்களின் பிரத்தியேக வாழ்க்கையைப் பற்றி அவர்ஒருபொழுதும் பேசமாட்டார். விடாப் பிடியான உறுதி, சுறுசுறுப்பின்மூலம் அவர் திறமை பெற்று விளங்கினர்; தெளிவாக, நிதானமாக அவர் நடத்தும் சம்பாஷணை மூலம், விஷயத்தின் அடி வேருக்குச் சென்று விடுவார்.

மற்றவர் பேசும்பொழுது, தலையை சிறிது சாய்த்து வைத்துக் கொண்டு அவர் காது கொடுத்துக் கேட்பார்; "ம்", "ஆமாம்" என்ற பதில்களை மட்டுந்தான் இடையிடையே சொல்வார். கேட்ட பிறகு, அதை ஒழுங்காக ஆராய்ந்து, முக்கியமான விஷயங்களைப் பொறுக்கி

யெடுத்து, அந்தப் பிரச்னேயின் சாரத்தைக் கூறுவார்; அதையும் மிகவும் சுருக்கமாகக் கூறுவார்; எதையும் அவர் நீட்டி வளர்க்கமாட்டார்; அதைச் சொல்வதுவும் ஆர்வத் தைத் தூண்டுவதாயிருக்கும். பல பிரச்சினேகளே அவரிடம் கொண்டு வருவார்கள். சிறிது பேச்சு நடத்தியதும், விஷ யத்தை நன்ருகப் புரிந்து கொண்டு, அதற்கு அற்புதமான பரிகாரம் கூறுவார். யோசனேகளும், பரிகாரங்களும் அடங் கிய பொக்கிஷத்தை அவர் விரல் முனேகளிலே அடக்கி வைத்திருப்பார்; வற்ருத ஊற்றுப் போன்ற ஞானம் படைத்தவர் அவர். அவரிடம் பல குணங்கள் இருந்தன, எடுத்ததை முடிக்கும் மனுேதிடம், ஞானம், நினேத்ததும் வரக்கூடிய கூர்மையான தர்க்க ஞானம், தீர்ப்புக் கூறும் ஆற்றல், சகலவிதமான பிரச்னேகளுக்கும் துணிச்ச லாகத் தோன்றும் ஆனுல் மிகவும் ஜாக்கிரதையாக முடிவு செய்யும்படியான மனுேபாவம் ஆகியவை நிறைந்தவர். அவரது பள்ளித் தோழர்களும், அவரோடு முன்னர் புரட்சிக்குத்துணேயாக நின்றவர்களும் அவரை என்னகூறிப் புகழ்வதென்று வார்த்தை கிடைக்காமல் திகைப்பார்கள்;

"மா சே-துங் ஒரு ஈடு இணேயற்ற பிறவி; அவரிடம் இணேயற்ற ஆற்றல் நிரம்பியுள்ளது".

அவரது பள்ளித் தோழர்களிடத்தில் ஒருமுறை அவர் கூறியதாகச் சொல்லப் படுவதாவது;

"உலகில் இருவகையான மக்கள் உள்ளனர்; தனிப் பட்ட விஷயங்களில் கெட்டிக்காரர்கள் ஒருவகை; ஸ்தா பன வேலேகளில் கெட்டிக்காரர்கள் இரண்டாவதுவகை. முன்னவர்கள் தான் அதிகம். ஆயினும் ஒவ்வொருவருக்கும் கெட்டிக்காரத்தனங்கள் உண்டு. அந்த கெட்டிக்காரத் தனத்தை—அது எல்வளவு சொற்பமாயிருந்தாலும் நல்ல வழியில் பயன்படுத்தி அபிவிருத்தி செய்ய அவரை உற் சாகப் படுத்தவேண்டும். ஒருவரை எடை போடும்பொழுது, அவரது கெட்டிக்காரத்தனங்களேத்தான் முதலில் நாம் கணக்கிடவேண்டும்."

மனிதர்களின் திறமையான அம்சங்களேக் கண்டு பிடித்து, உற்சாகப்படுத்தி, அபிவிருத்தி செய்யும் இந்த

ஆற்றலால்தான், பெரிய புரட்சிக்காரரும், ஸ்தாபன வேலைகளில் சமர்த்தருமான மாசே-துங், சீனாவையும், சீன மக்களையும் விடுவிக்கும் புரட்சிப் பணியில் பிரமாத வெற்றி கண்டார்.

"கூன், குருடு, செவிடு, ஊமையினரும் புரட்சி லட்சியத்திற்குப் பயன்படலாம்" என்று அவர் அடிக்கடி குறிப்பிடுவார்."

ஸ்தாபன வேலைகளில் ஈடுபட்டிருந்த ஊழியர்களிடம் பேசும்போது அவர் கூறியதாவது; "உங்களோடு ஒரு தோழருக்கு எந்தெந்த விஷயத்தில் ஒத்திருக்கின்றது—புரட்சியில் ஆர்வம், மார்க்சிசம்-லெனினிசத்தில் நம்பிக்கை இருக்கிறதா என்று முதலில் கவனியுங்கள். பிறகு, அவரிடம் குறைபாடுகள், சித்தாந்த பலவீனங்கள் ஏதாவது இருக்கிறதா என்று கவனியுங்கள்."

ஊழியர்களிடம் அனுஷ்டிக்கும் இந்த விவேகமான போக்கு, வரட்டுத் தத்துவவாதிகளும், விஷய ஞானமற்ற வெறும் அநுபவ சித்தாந்தவாதிகளும் அனுஷ்டிப்பதற்கு நேர் விரோதமானதாகும்; வேலையைத் "திறம்பட செய்விப்பதற்காக" குறைபாடுகளைப் பெரிதாக்கிக் கூற வேண்டுமென்று சொல்பவர்கள் அவர்கள் வேலையைத் துரிதப்படுத்துவதற்காக, திறமையான அம்சங்களைப் பாராட்ட வேண்டுமென்று சொல்லுபவர் மாசே-துங். தவறு செய்தவர்கள், வழி விலகிச் சென்றவர்கள், அல்லது இன்னும் அரசியல் விழிப்படையாதவர்கள், அவர்கள் கட்சி அங்கத்தினர்களா யிருந்தாலும் சரி, அல்லது கட்சிக்கு வெளியிலுள்ள நண்பர்களாயிருந்தாலும் சரி, அவர்களிடம் அனுஷ்டிக்கும்படியான கொள்கை—"குறை நீக்கித் திருத்தவேண்டும்" அத்துடன் "அவர்கள் திருத்த உதவவேண்டும்" என்றே இருக்கவேண்டும் என்று அவர் சொல்லுவார்.

## 19. மாணவர் யூனியன் அமைத்தல்

ஆரம்ப முதல்தரப் பள்ளியில், மாணவர் யூனியன் ஒன்றை அமைத்ததன் மூலம், மாசே-துங்கின் ஆற்றலும், ஸ்தாபன வேலைத் திறமைகளும் முதல்முதலாக வெளிப்

பட்டன. அதுதான், அவரது சமூக சேவைகளுக்கும், ஜன நாயக இயக்க வேலைகளுக்கும் முதற்படியாகும். பொது ஜனத் தலைவர் என்று அவருக்கு ஏற்பட்ட அந்தஸ்து, பொதுஜனப் போராட்டங்களினால் கிடைத்ததாகும்; அதற்கான பூர்வாங்க அநுபவம் அவருக்கு இங்குதான் கிடைத்தது.

ஹூனானிலும், ஏன், நாடு முழுவதிலுமே கொடுக்கப்பட்ட கல்வி முறையானது, பள்ளி நிர்வாகம் சர்வாதிகாரம் நிறைந்ததாகவும், ஊழல் மலிந்ததாகவும் இருந்ததென்பதற்கு சரியான அத்தாட்சியாகும். தலைமை ஆசிரியராக வரவேண்டுமென்றால், பல அதிகாரிகளின் தயவை சம்பாதிக்க ஆனதெல்லாம் செய்யவேண்டும்; அத்துடன் புகழ் பாடவேண்டும்; பணிந்து கெஞ்சவேண்டும்; சுய-விளம்பரம் செய்துகொள்ளவேண்டும்; ஒருவர் தலைமை ஆசிரியராக அமர்ந்ததுமே, அவர் செய்யும் முதல் வேலை, அவரது நண்பர்கள், உறவினர்களை ஆசிரியர்கள் தொழிலிலும், நிர்வாகப் பதவிகளிலும் அமர்த்துவதுதான்; அந்த வேலைகளுக்கு அவர்கள் லாயக்காக இருக்கமாட்டார்கள்; ஆயினும் அவர்கள் வேண்டாமென்று ஆட்சேபிக்க மாணவர்கள் பயப்படுவார்கள். தலைமை ஆசிரியரிடந்தான் நிதி விவகாரமும் இருக்கும். பொதுஜன நிதித் தொகையெல்லாம் அவர் பைக்குள் போய்விடும். மாணவர்கள் காசு கொடுத்தும் அவர்களுக்கு நல்ல உணவு போடாமல் அவர்கள் வதைக்கப்படுவார்கள்.

யுவான் ஷி-காய் ஜனாதிபதியாயிருந்த காலத்தில், அநேகமாக எல்லாத் தலைமை ஆசிரியர்களும் பழைய ஆட்சியைத்தான் ஆதரித்தார்கள். ஒவ்வொரு பள்ளிக்கூட பிரசங்க மண்டபத்தின் சுவரிலும் "ஜனாதிபதியின் உத்தரவுகள்" பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருக்கும். அதிலுள்ள வாக்கியங்கள் எல்லா மாணவர்களுக்கும் நன்கு தெரியும் : கலகங்கள்கூடாது; வாத்தியார்களிடம் பயபக்தியோடு நடக்கவேண்டும் என்றெல்லாம் எழுதியிருக்கும். மாணவர்கள் மண்டபத்தில் வந்து கூடியதும், அந்த "வாக்கியங்கள்" ஒரு வாத்தியாரால் உரத்த குரலில் படிக்கப்படும். ஆனால் அதை மாணவர்கள் கவனிப்பதில்லை; அதற்கு

எதிராக சத்தம் போட்டுக் குழப்பம் விளைவிப்பார்கள். பெரும்பாலான தலைமை ஆசிரியர்கள் ஏதாவது ஒருவகையில் அதிகாரிகளின் காரியாலயங்களுடன் தொடர்புகொண்டிருப்பதால், பள்ளிக்கூட வகுப்புக்கு வெளியில் நடக்கும் சகல நடவடிக்கைகளையும் அடக்கிவிட அவர்கள் எண்ணுவது சகஜமே. மாணவர்கள் தங்களது பாடப் புத்தகங்களைமட்டுமே படிக்கவேண்டும்; பள்ளிக்கு உள்ளேயோ வெளியேயோ நடக்கும் எந்த நடவடிக்கையிலும் அவர்கள் கலந்துகொள்ள அநுமதிக்கப்படுவதில்லை. அதுதான் பொதுவான நிலைமை; அதற்கு ஆரம்ப முதல்தரப் பள்ளியும் விதிவிலக்கல்ல.

பலதடவைகளில், ஆத்திரங்கொண்ட மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்; ஒரு புதிய தலைமை ஆசிரியரை நியமிக்கவேண்டுமென்று மாகாண சர்க்காரைக் கோரியிருக்கிறார்கள். மாணவர்கள் நலனைப் பாதுகாக்க மாசே-துங் முன் வந்தார்; யதேச்சையான, ஊழல் மலிந்த பள்ளி நிர்வாகத்தை எதிர்த்து தீவிரமாசக் கிளர்ச்சி செய்தார். அதில் திறமையும், உறுதியும் காட்டினார் அவர். மாணவர்கள் விஷயத்தில் விட்டுக்கொடுக்காதவர் அவர் என்று அறிந்த சக-மாணவர்கள், அவரைத் தங்களது தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். இதற்காக, பள்ளி நிர்வாகஸ்தர்கள் அவரை ஒருமுறை பள்ளியைவிட்டு விலக்க முயன்றார்கள்; ஆனால் அவருக்கு ஆதரவாக மாணவர்கள் அனைவரும், ஒரு சில ஜனநாயக எண்ணங்கொண்ட ஆசிரியர்களும் (இவர்களும் அதிகாரிகளின் கொடுமைக்கு உள்ளானவர்கள்) திரண்டெழுந்ததால், நிர்வாகத்தின் பாச்சா பலிக்கவில்லை.

அவரது சக-மாணவர்களின் பரிபூரண ஆதரவோடு, மிகவும் தீவிரமான சிலரை மா சே-துங் திரட்டினார்; அத்துடன், ஓரளவுக்கு விஷயஞானம் படைத்த, ஜனநாயக எண்ணங்கொண்ட, யுவான் ஷி-காய்—எதிர்ப்பு மனோபாவங்கொண்டவர் தலைமை ஆசிரியராக இருக்க நேர்ந்ததாலும் அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, மாணவர் யூனியன் என்ற ஸ்தானத்தை அவர் ஸ்தாபித்துவிட்டார். இதற்கு முன் இதைப் போன்ற ஒரு சம்பவம்

ஹுனன் பள்ளியில் நடந்ததே கிடையாது. மாணவர்களிடையே மாணவர் யூனியன் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கியது. நிர்வாகக் கூட்டங்களும், கல்வி சம்பந்தமான கூட்டங்களும் பள்ளியில் நடந்தால், யூனியன் பிரதிநிதி ஒருவரும் அதற்கு அழைக்கப்படுவார். சகல நிர்வாக நடபடிக்கைகளோ அல்லது சட்டதிட்டங்களோ யூனியனுலும் ஆதரிக்கப்படவேண்டும். யூனியன் மூலமாகவும், மாணவர்கள் தங்களது கோரிக்கைகளை பள்ளி நிர்வாகத்திற்கு சமர்ப்பித்தார்கள். யூனியன் நிறுவப்பட்ட பிறகு, மாணவர்கள் பிரச்னை சம்பந்தமான பள்ளி வேலை, தினசரி வாழ்க்கை, கட்டுப்பாடு, பள்ளிக்கு அப்பாற்பட்ட நடவடிக்கைகள் ஆகியவை யூனியனுல் திருப்திகரமாகத் தீர்க்கப்பட்டன. 500 க்கு அதிகமான மாணவர்கள் அனைவருமே மா சே-துங் தலைமையை அங்கீகரித்தார்கள். அவரிடமிருந்து ஒரு அறைகூவல் எழுந்தால், பள்ளிக்கூட முழுவதுமே செயலில் குதிக்கத் தயாராயிருந்தது.

சிலகாலம் ஆரம்ப முதல்தரப் பள்ளி வாழ்க்கை மிகவும் பரபரப்பாக இருந்தது. மாணவர்களின் திறமையைக் காட்டும் கண்காட்சிகள், விளையாட்டுப் பந்தயங்கள், விசேஷமான விஷயங்கள் பற்றிய விவாதங்கள், ஆராய்ச்சிக் குழுக்களின் கூட்டங்கள் ஆகியன அடுத்தடுத்து பிரமாதமான முறையில் நடைபெறும். பொருட் காட்சிகளில் மா சே-துங் அறிவாற்றலும், அவரது முத்துக் கோத்தாற்போன்ற எழுத்தும் சதா மனதைக் கவரும் காட்சிகளாக விளங்கின. "விமர்சனக் குறிப்புப் புத்தகத்தில்" எழுதும் விருந்தினர்கள் அவரை விசேஷமாகக் குறிப்பிட்டார்கள்; விசேஷமாகப் புகழ்ந்து கூறினார்கள். மாணவர் யூனியனும், அதன் கிளைப் பகுதிகளும், ஜப்பானிய ஆக்கிரமிப்பு-எதிர்ப்பு யுத்தத்தின் ஆரம்பக் கட்டம்வரை ஆரம்ப முதல்தரப் பள்ளியில் நடந்து வந்தன. இந்தப் பல்வேறு மாணவர் ஸ்தாபனங்களும் சமூக, அரசியல் இயக்கங்களில் ஒரு முக்கியமான பாத்திரத்தை வகித்தன.

## 21. தனிக்காட்டு ராஜாக்கள்—எதிர்ப்பு இயக்கம்

டான் யென்-காய்க்கு அடுத்த ஹூனன் ராணுவ கவர்னராக டாங் சியாங்-மிங் வந்தார். குடியரசைக் கவிழ்த்து, தானே சக்ரவர்த்தியாக வேண்டு மென்று யுவான்ஷி-காய் முயன்று கொண்டிருந்த போது, டாங் சியாங்-மிங்கை அவர் கவர்னராக நியமித்தார். இந்த டாங் சியாங்-மிங் என்பவர் டுங் மெங் ஹூய்யின் அங்கத்தின ராவர்; ஆனால் அவர் உண்மையில் மஞ்சுக்களின் உள வாளிகளில் ஒருவர். அவர் ஹூனன் வந்த பிறகு, பல கொலைகள் அடுக்கடுக்காய் நடந்தன; அதனால் அவரை அந்த மாகாணத்து மக்கள் "கொலைகாரன் டாங்" என்ற பட்டப்பெயர் சூட்டி அழைத்தனர். யுவான் சக்கரவர்த்தி ஆனதும், டாங்கிற்கு பிரபுப் பட்டம் வழங்கினான்,

ஆனால் யுவான் ஆட்சி அற்ப காலத்துக்குத்தான் நடந்தது. யூனன் மாகாணந்தான் அவனுக்கு எதிராக முதலில் எழுந்தது. அதற்கடுத்து இதர மாகாணங்களும் சுதந்தரப் பிரகடனம் செய்தன. "குடியரசு பாதுகாப்புச் சேனை" ஒன்று திரட்டப்பட்டு ஜெக்குவான், ஹூனன், வெய்ச் சோமீது பாய்ந்தது. யுவான் ஷி-காய்க்கு எதிராக வேலை செய்யும்படி சன் யாட்-சென்னும் தனது ஆட்களை யாங்சீ பள்ளத்தாக்குக்கு அனுப்பினார். குடியரசு பிறந்த 5 வது வருடத்தில் (1916), "டாங்கை வெளியே விரட்டும்", இயக்கத்தை லின்-சூ-ஹானும் (இப்பொழுது மத்திய மக்கள் சர்க்காரின் பொதுக்காரியதரிசியா யிருக்கும் லின் போ-சூ), ஹூனனிலுள்ள இதரரும் தொடங்கினார்கள். தனக்கு எதிராக பல மாகாணங்கள் எதிர்த்துக் கிளம்பியதைக் கண்ட யுவான், முடிதுறந்து மீண்டும் ஜனாதிபதியாகவே ஆகவேண்டுமென்று, 100 நாட்களுக்கு சக்கரவர்த்தியா யிருந்த பிறகு முடிவுக்கு வந்துவிட்டான்.

"குடியரசைப் பாதுகாக்கும் ராணுவம்" தயாரா யிருந்தது. அதற்கடுத்து பல மாகாணங்கள் சுதந்தரப் பிர கடனம் செய்தன. சோர்வுற்று, நம்பிக்கை யிழந்து யுவான் ஷி-காய் இறந்தான்; டாங் சியாங்-மிங் பதவியி லிருந்து நீக்கப்பட்டான்.

1917 ஜூலை 1ல் நீக்கப்பட்ட பூ யீயை மீண்டும் பதவியிலமர்த்த சாங் ஸூன் முயன்றார்; ஆனால் ஜூலை 10ல் அவர் தோற்கடிக்கப்பட்டார். பெங் கோ-சாங் ஜனாதிபதியானார்; டுவான் சி-ஜூய் (1864-1936 ; யுவான் ஷி-காய்க்கு வலது கை போன்றவர்) பிரதம மந்திரியானார். வட பிராந்திய தனிக் காட்டு ராஜாக்கள் கும்பலைச் சேர்ந்த பூ லியாங்-சோ என்ற ஒரு புதிய ராணுவ கவர்னர் ஹூனானுக்கு அனுப்பப்பட்டார். அன்று முதல், தென்மேற்கு பிராந்திய கும்பலிடமிருந்து டான்யென்-காய் உதவி கோரியதோடு, அதே சமயத்தில் ஹூனானில் ராணுவத் தயாரிப்புக்களும் செய்தார். அந்தக் காலகட்டத்தில் ஒரே குழப்பமயம்; சர்வ சதாகாலமும் மோதல் நடந்துகொண்டேயிருந்தது. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், சாங்ஷா பள்ளியை பல்வேறு ராணுவங்கள் அடிக்கடி நிர்ப்பந்தமாக ஆக்கிரமித்துக் கொள்ளும்.

அந்த சமயத்தில், போ லியாங்-சோ தலைமையிலிருந்த வடபிராந்திய ராணுவம், "குடியரசுப் பாதுகாப்பு ராணுவத்"தால் முறியடிக்கப்பட்டு சாங்ஷாவை நோக்கிப் பின்னடைந்து வந்து கொண்டிருந்தது. அவர்கள், பல பள்ளிக்கூடக் கட்டிடங்களை ஆக்கிரமித்துக்கொள்ள விரும்பினர். சாங்ஷாவின் தெற்கு வாசலில் ஆரம்ப முதல்தரப் பள்ளி இருந்ததாலும், அத்துடன் கண்ணைக் கவரும் ஒரு பெரிய, நவீன கட்டிடமாக அது இருந்ததாலும், முறியடிக்கப்பட்ட ராணுவத்தின் ஒரு பகுதியினர் அதைத் தங்களுக்குரிய இடமாக ஆக்க விரும்பியது சகஜமே, அந்த வேளையில் மா சே-துங் முன்வந்து, உடற்கட்டுவாய்ந்த, உடற்பயிற்சி பெற்ற சகல வாலிபர்களையும் ஒன்று திரட்டி, பள்ளிக்கூட இடங்களைப் பாதுகாக்கும் பொறுப்பை மேற்கொண்டார். பள்ளிக்கூட வாசல்களை, வகுப்புகளில் போடப்பட்டிருந்த நாற்காலி, மேஜைகளைக் கொண்டு அரணாக எழுப்பினார்கள் ; வடபிராந்திய சிப்பாய்களிடமிருந்து எடுத்த சில துப்பாக்கிகளை வைத்துக்கொண்டு ஆயுதபாணிகளாயினர். இவ்வாறு ஆயுத பலத்தால் பள்ளிக்கூடத்தைப் பாதுகாக்க அவர்கள் தயாரானார்கள். பயங்கொள்ளிகளாயிருந்த மாணவர்களும், ஆசிரியர்களும் ஒரே கும்பலாகக் கூடிக்கொண்டு

படுக்கை மண்டபத்தின் பின்புறமுள்ள முற்றத்தில் ஒளிந்து கொண்டனர்; துப்பாக்கிச் சத்தம் கேட்கும் போதெல்லாம் பயந்து நடுநடுங்கினர்.

பொறுப்பு வாய்ந்த நிர்வாகஸ்தர்கள் அனைவரும், சில ஆசிரியர்களும், சாதாரணமாக மண்டைக்கனம் பிடித்தவர்களாகவும், தற்பெருமை கொண்டவர்களாகவும் இருந்தது போக, இப்பொழுது மா சே-துங் இடும் உத்திரவுகளை வாய்மூடி நிறைவேற்றவும், அவர் எதைச் செய்யச் சொன்னாலும் அதைச் செய்யச் சித்தமாகவும் இருந்தார்கள். இதன் விளைவாக, பின் வாங்கிவந்த ராணுவம் பள்ளிக் கூடத்தைக் கடந்து செல்லவேண்டி நேரிட்டது; ஆனால் போகும்பொழுது சில வேட்டுகளைக் கிளப்பிவிட்டுப் போயினர். அவர்கள் அதன் பிறகு தெற்கே திரும்பி, ரயில்வே பாதை வழியாக மொய்த்துக்கொண்டு, போகும் வழியில் கத்திக்கொண்டே போயினர்.

பள்ளிக்குப் பின்புறமுள்ள குன்றின்மீது மா சே-துங்கும், இன்னும் சில மாணவர்களும் ஏறி நின்று, ஒழுங்கற்ற முறையில் நடந்துகொண்ட சிப்பாய்களைக் கடிந்தனர். அந்த விசாலமான அழகு நிறைந்த பள்ளிக் கட்டிடம் தலை நிமிர்ந்து சுதந்தர மூச்சுவிட்டு நின்றது; எந்த ராணுவமும் அங்கு வந்து ஆக்கிரமிக்கவுமில்லை; அது கொள்ளையடிக்கப் படவுமில்லை, முதல் முறையாக ராணுவ வேலையில் முயற்சி செய்துபார்த்த சந்தர்ப்பம் என்று இந்த சம்பவத்தைப்பற்றி மா சே-துங் மகிழ்ச்சிகரமாயிருக்கும் வேளையில் அடிக்கடி சொல்லிக் காட்டுவார்.

குடியரசு பிறந்த முதல் ஆண்டில் நாடு முழுவதும் ஒரே குழப்பத்தில் ஆழ்ந்து கிடந்தது. இரண்டாவது புரட்சி; "குடியரசைப் பாதுகாக்கும் ராணுவ" இயக்கம்; **யுன்னன், க்வெய்சோ, குவாங்டங், குவாங்சி** மாகாணங்களில் இரண்டாவது தடவையாக சுதந்தரப் பிரகடனம் செய்யப்பட்டது; பழைய பாராளுமன்றத்தைக் கட்டிக் காத்து, வடபிராந்திய தனிக்காட்டு ராஜாக்கள் முகாமில் உள்ள அதிகாரிகளை உடனடியாக மாற்றுதலுக்கான இயக்கம்; ஹோப்பேய் கும்பலும், அன்வேய் (டுவான்) கும்பலும்

பதவிக்கு வந்து அடுத்தடுத்து பதவி யிழந்தது ஆகிய எல்லா வற்றுலும் ஹூனனில் குழப்பம் அதிகரித்தது.

தென்மேற்குப் பகுதியைத் திருப்திப் படுத்துவதற் காக, அப்பொழுது குடியரசின் ஜனுதிபதியாகவிருந்த பெங் கோ-சாங், ஹூனன் ராணுவ கவர்னராக டான் யென்-காய் என்பவரை நியமித்தார், ஆயினும் அன்வேய் கும்பலைச் சேர்ந்தவர்கள் போரிட்டுத்தாஞக வேண்டுமென பிடிவாதமா யிருந்தனர். அதன்பின்னர் சாங் சிங்-யாவ் என்பவரையும் இன்னும் இரண்டு ஜெனரல்களையும் ஹூனன்-கியாங்சியின்மீது பாயவேண்டுமென்று பெங் கோ-சாங் உத்தரவிட்டார். சாங்ஷாவின் அருகில் முகாம் போட்டிருந்த ராணுவத் தலைவன் சாங்சிங்-யாவ்வை ஹூனன் ராணுவ கவர்னராக டுவான் சி-ஜூய் நியமித் தார். சிப்பாய்கள் கட்டுப்பாடு எதுவுமில்லாதவர்கள் போல, மக்களின் வெறுப்புக்கு ஆளாகும்படி நடந்து கொண்டனர். ஹூனனிலுள்ள சகல முற்போக்கு சக்தி களையும் அடக்கி ஒடுக்க, **சாங்** ஆனதெல்லாம் செய்துபார்த் தான், அத்தகைய ஒரு எதிரிக்கு விரோதமாக எடுக்கப் பட்ட தனது சமூக, அரசியல் நடவடிக்கைகளெல்லாம் பலிக்கவில்லை யென்று கண்ட மா சே-துங், இரண்டாவது தடவையாக, முன்னைவிடப் பெரிய "சாங்கை-வெளியே துரத்தும்" இயக்கத்தைத் துவக்கினுர். (ஆரம்ப முதல்தரப் பள்ளித் தலைமை ஆசிரியரும் ஒழுங்கற்றவருமான சாங் கான்னுக்கு எதிராக முதலாவதாக ஒரு சிறிய இயக்கம் துவக்கப்பட்டது. இந்த இரு இயக்கங்களுக்கும் மா சே-துங் தலைமை தாங்கினுர்). தனிக்காட்டு ராஜாக்கள் எதிர்ப்பு இயக்கம், இவ்வாருக ஹூனனில் ஆரம்பிக்கப்பட்டு, படிப் படியாக நாடு முழுவதும் பரவியது.

## 22. சின் மின் சங்கம்—ஹூனன் புரட்சி இயக்கத்தின் முக்கிய அங்கம்

1917-ஆம் ஆண்டு கோடை காலத்தில், சாங்ஷாவி லுள்ள எல்லாப் பள்ளிக்கூடத்தின் சுவர்களிலும் சிறு துண்டுப் பிரசுரங்கள் ஒட்டப்பட்டிருந்தன. இதிகாச

வாக்கியத்தில் ஆரம்பிக்கப்பட்டு ஆற்றொழுக்கு நடையில் எழுதப்பட்ட சில வரிகள் அதில் காணப்பட்டன ; **"தங்கமைன தோழர்களைத்தேடி சந்தமிசைக்கின்றது."** நாட்டின் விடுதலைப் பணியில் பங்குகொள்ள விரும்பும் அனைவருக்கும், ஆசிரியரோடு சேர்ந்து நிற்க முன்வருபவர்களுக்கும் விடுக்கப்பட்ட அறைகூவல் அது. அதாவது இளைஞர்களுக்கு எழுதப்பட்ட ஒரு பகிரங்கக் கடிதம் என்று சொல்லுவோமே! அந்தக் கடிதத்தில் கையெழுத்து எதுவும் கிடையாது; அதில் "28 கோடுகள்" என்ற விநோதமான பெயர்தான் இருந்தது. (மா சே-துங் என்ற மூன்று எழுத்துக்களிலும் மொத்தம் 28 கோடுகள் உண்டு).

இந்த அறிக்கையை சாங்ஷா பத்திரிகைகளும் வெளியிட்டன. அதன் விளைவாக, நூற்றுக்கணக்கான ஆர்வமிக்க இளைஞர்கள், அறைகூவலுக்குச் செவி சாய்த்தார்கள். அவர்களில் பெரும்பாலோர் ஆரம்ப முதல்தரப் பள்ளி மாணவர்களாவர்; இதர பள்ளிகளிலிருந்தும் ஒரு சிறு தொகையினர் வந்தனர்.

இலையுதிர் காலம் வந்தது. கோடை விடுமுறை முடிந்து மாணவர்கள் பள்ளிக்குத் திரும்பிவிட்டனர், ஒரு சுந்தரமான தினம்; சர்க்கரை இலைகள் உதிர ஆரம்பிக்கும் தருணம்; யூலூ மலையடிவாரத்திலுள்ள சை ஹோ-ஷென் குடும்பத்தார் வாடகைக்கு எடுத்த வீட்டில் சுமார் 30 பேர் கூடினர். சாப்பாட்டுக்கு இடைவேளையில், ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்த வேண்டிய அவசியம், அதன் பெயர், நோக்கம், அதன் பொது விதிகள் ஆகியவை பற்றி அவர்கள் விவாதித்தனர். மா சே-துங் ஆரம்பித்த இந்த "இயக்கத்தின்" விளைவாக, சின்மின் சங்கம் (புதிய மக்கள் சங்கம்) ஒன்று நிறுவப்பட்டது. மா சே-துங் பல அற்புதமான யோசனைகள் கொடுத்தார். அதன் பிரகாரம், அன்று அந்த சங்கம் நிறுவப்பட்டது; அதற்கு ஸ்தாபகரும், அமைப்பாளரும் மா சே-துங்தான். அதற்கு அவரை செயலாளராகவும் இருக்கும்படி வேண்டினர்; ஆனால் அவர் மிகப் பணிவோடு அதை மறுத்துவிட்டு, உதவி-செயலாளராக இருக்க இசைந்தார். "ஆற்றலுடையவர்களை சிருஷ்டிப்பதும், அறிவு நிரம்பிய ஆராய்ச்சி நடத்துவதும்" சங்கத்தின்

நோக்கமாகும். சட்டதிட்டங்களில் சேர்க்கப்பட்ட விதிகளில்—சூதாட்டம், விபச்சாரம், ஊர் சுற்றுதல் ஆகியவை விலக்கப்பட்டிருந்தன. சாங்ஷாவிலுள்ள சகல முற்போக்கு இளைஞர்களையும் ஒரு ஸ்தாபனத்தின் கீழ் முதல் முறையாக ஒன்றுபடுத்தியதுதான் சங்கத்தின் குறிப்பிடத்தக்க பணியாகும்,

ஹூனனிலும், சீனு முழுவதிலும் பின்னர் நடந்த சம்பவங்களில் சங்கத்திற்கிருந்த பங்கைப்பற்றி மிகைப்படுத்திக் கூறுவதென்பது கடினம். அதில் 70 அல்லது 80 அங்கத்தினர்கள் இருந்தனர். அவர்களில் அநேகமாக எல்லோருமே, பின்னர், சீன கம்யூனிஸ்ட் இயக்கத்தின் புகழ்மிக்க தீவிரவாதிகளாயினர்; அவர்களது பெயர்கள், சீனப் புரட்சி வரலாற்றில் பொன்னேடுகளாயின. 1924—27 புரட்சி தோல்வியுற்ற பிறகு, தங்களது உயிரை அர்ப்பணித்த தியாகிகள் சிலரின் பெயர்களைக் கீழே தருகிறோம்.

**குயோலியாங்**—சியாங்யின் வாசி, ஹூனன் தொழிலாளர்கள் தலைவர், பேராற்றல் வாய்ந்தவர், புரட்சி தோற்ற பிறகு சாங்ஷாவில் வீர மரண மடைந்தவர்.

**சியாங் சிங்-யூ**—சூப்பூ (ஹூனன்) வாசி, சீன கம்யூனிஸ்ட் கட்சியின் முதலாவது திறமை மிகுந்த பெண் தலைவி, பேச்சிலும், எழுத்திலும், செயலிலும் மிகத் திறமை வாய்ந்தவர். புரட்சி தோற்ற பிறகு, 1928 மே 1-ம் தேதி அதிகாலை 4 மணிக்கு ஊ ஹானில் வீரமரண மடைந்தார்; கோமின்டாங் கொலைகாரர்கள் இந்த வீராங்கனையைத் தூக்கிலிட்ட செய்தி நாட்டையே உலுக்கிவிட்டது.

**சென் ஸாங்**—விவாதத்தில் மிகவும் புகழ் பெற்றவர், அவர் ஒரு அற்புதமான பிரசங்கி; ஆவேசமான பேச்சாளி, நடுத்தர உயரமும், நல்ல வனப்பும் பொருந்திய இளைஞர்; ரசிக்கத்தக்க குணங்களும், முற்போக்கு எண்ணங்களும் கொண்டவர். புரட்சி தோற்றபிறகு அவர் கைதி செய்யப்பட்டார்; அவர் கொல்லப்படுவதற்குமுன், அவர் செய்த கனல் கக்கும் பிரசங்கத்தில், கோமின்டாங் கொலைகாரர்களைத் தீர்த்துக்கட்டி, போராட்டத்தை விடாமல் தைரியமாக நடத்தும்படி அறைகூவல் விடுத்தார்.

**லோ குயே-சான்**—சியாங்டன் வாசி; சாங்ஷா தொழிலாளர்களின் இயக்கங்களில் பங்கு கொண்டார்; புரட்சி தோற்ற பிறகு மரண மடைந்தார்.

**சாய் ஹோ-ஷென்** (47-ம் பக்கம் பார்க்க)

**சியா சி**—யீயாங் வாசி, 1934-ல் **செஞ்சேனை நெடும்பிரயாணத்**தின் போது நீரில் மூழ்கியிறந்தார்.

**ஹோ ஷு-ஹெங்**—நிங் சியாங் வாசி; சின்மின் சங்கத்திலும், சீன கம்யூனிஸ்ட் கட்சியிலும் ஆதிமுதல் அங்கத்தினர்களாயிருந்தவர்களில் அதிக வயதானவர்; **நெடும் பிரயாணத்தில்** மத்திய செஞ்சேனை கியாங்சியை விட்டுக் கடந்ததும், எதிர்ப் புரட்சிக்காரர்கள் கைதி செய்ய வந்தபோது எதிர்த்ததில் கொல்லப்பட்டார்,

......மக்கள் விடுதலை லட்சியத்திற்காக இவ்வாறு உயிர் நீத்தவர்கள் எண்ணற்றோர். சீனாவின் வீரப் புதல்வர்களும், புதல்விகளும் புரிந்த மாபெரும் வீரச் செயல்களும், வானமுயர் நியாய உணர்ச்சியும் என்றும் நின்று நிலவும்!

* * *

மே 4-ம் தேதி கால கட்டத்திலும், புரட்சியிலும் மாணவர், இளைஞர் இயக்கங்களுக்கு ஆரம்ப முதல்தரப் பள்ளி பேருதவி புரிந்தது என்றால், அதற்கு சின்மின் சங்கம்தான் முக்கிய காரணமாகும்; அதுதான் அஸ்திவாரமான ஸ்தாபனமாகும்; அதன் அங்கத்தினர்கள் தான் புதிய கலாச்சார இயக்கத்தினுடையவும், படிப்பாளிகளிடையே நிலவிய இயக்கத்தினுடையவும் உருக்குத் தூண்களாய் விளங்கினவர்கள். தொழிலாளர், விவசாய இயக்கங்களில் சங்கம் முழுமூச்சாக இறங்கியது; அதன் மூலம் சமூக, அரசியல் இயக்கங்களின் அமைப்பாளனாகவும், பிரதான தூண்டுகோலாகவும் விளங்கிற்று. ஆகவே, ஹூனான் கம்யூனிஸ்ட் கட்சியின் முன்னோடியாகவும், இதர இடங்களில் ரசசிய கட்சி யூனிட்டுகளின் பாத்திரத்தை வகித்தும் விளங்கிற்று. இதற்கெல்லாம் மூலகாரணம் மா சே-துங் தான்; அவரது முற்போக்குத் தன்மை, சரியான சிந்தனை, அஞ்சாது "வேலை செய்யும் நடை"யால் ஒரு தீர்க்கமான புரட்சிப் போக்கும், பரம்பரையும் உண்டாயிற்று.

# அத்தியாயம் V

## புதுமைக் கலாச்சார இயக்கத்திற்கும், புதிய ஜனநாயக இயக்கத்திற்கும் ஈட்டிமுனையானுர்

### 23. ஹுனனில் புதுமைக் கலாச்சார இயக்கத் தொடக்கம்

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, நிலப்பிரபுத்வ நுகத் தடியின்கீழ் சீனு நெளிந்துகிடந்தது. சீன மக்களாலும், குறிப்பாக விவசாயிகளாலும், எண்ணற்ற எதிர்ப்பியக்கங் களும் புரட்சிகளும் நடத்தப்பட்டன; அவைகளை யெல் லாம், பேராசை பிடித்த நிலச்சுவான்தார்களும், பெரும் பிர புக்களும் பயன்படுத்திக் கொண்டார்கள். அரசர்கள் பரம் பரை மாறின; ஆனுல் யுகம் யுகாந்தரமாக சமூகத்தின் நிலப்பிரபுத்வகுணும்சம் அடிப்படையில் மாருமலேயே இருந்துவந்தது. ஒரு அரச பரம்பரை மற்ருெரு அரச பரம் பரையின் மீது ஏறி நின்றது; ஆனுல் முதுகை ஒடிக்கும் நிலப்பிரபுத்வச் சுரண்டல் பொறுக்காமல் மக்கள் துடிப் பது அகலவில்லை. அதன் பின்னர், முதலாளித்வ உலகின் ஏகாதிபத்திய நாடுகள் "பெரிய சுவற்றில்" ஓட்டைபோட ஆரம்பித்தார்கள்; வர்த்தகம், மதப் பிரச்சாரம், பகிரங்க யுத்தம் ஆகிய முறைகளால் ஓட்டை உண்டு பண்ண முயற் சித்தார்கள். அதன் விளைவாக, சீனுவும், சீன மக்களும், அந்நியப் படையெடுப்பாளர்களின் ஆக்கிரமிப்பு, அடக்கு முறை, சுரண்டல், சிறுமைப்படுத்தல் ஆகியவற்ருல் சொல் லொணு வேதனைக்குள்ளாயினர். ஊழல் நிறைந்த மஞ்சு சர்க்கார், உள்நாட்டில் சர்வாதிகாரப் போக்கும், வெளி நாட்டாரோடு அடிமைத்தனமான போக்கும் அனுஷ்டித்த தால், சீன மக்களிடையே வியாபகமான எதிர்ப்புக் கிளம் பியது. அடைபட்டுக் கிடந்த சீன மக்களின் அடங்கா உணர்ச்சியெல்லாம், இறுதியாக 1911ம் ஆண்டு புரட்சியில் வெடித்தது. பூர்ஷ்வா - ஜனநாயகப் புரட்சித் தன்மை

பொருந்திய இந்தப் புரட்சி, "சீர்திருத்தம்", "நவீன மய மாக்குதல்", "சட்ட பூர்வமான கோஷூட்சி" போன்ற அரை - நிலப்பிரபுத்வ சீர்திருத்த இயக்கங்களை யெல்லாம் ஒதுக்குவதில் வெற்றியடைந்தது.

காங் யூ - வே, லியாங் சி - சாவ் போன்ற சீர்திருத்த வாதிகளும்) **ஜென் சூயே** ("மக்களை நேசிக்கும் கலை") என்ற நூலை எழுதிய டான்சூ - டுங் என்ற மற்றொரு சீர்திருத்த வாதியும் எழுதிய புத்தகங்களென்றால் மா சே-துங்குக்கு ரொம்பப் பிடித்தம். அவர் கூறும் வாக்கியங்களையே சொல்லப் போனால், அந்த சமயத்தில், "மிதவாதம், ஜனநாயக சீர்திருத்தவாதம், கற்பனை சோஷலிசம் ஆகிய கருத்துக்கள் கலந்த ஒரு விநோத அவியலை" அவர் உட்கொண்டிருந்தார். ஆனால் 1911ம் ஆண்டு புரட்சியின்போது, புரட்சிகரமான ஜனநாயகத்தின் மீது அவர் நம்பிக்கை கொண்டிருந்தார், நம்பிக்கை கொண்டுள்ளார். மே 4ம் தேதி இயக்கம் ஆரம்மானதும், "1914ல் தொடங்கிய முதல் ஏகாதிபத்திய உலக மகாயுத்தத்திற்குப் பிறகும், 1917ல் நடந்த அக்டோபர் ருஷ்யப் புரட்சியின் மூலம் உலகில் ஆறில் ஒரு பகுதியில் சோஷலிச அரசு நிர்மாணிக்கப்பட்ட பிறகும்" இம்மாதிரியான ஜனநாயக முறையில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. அது ஒரு பெரிய பாய்ச்சலில் முன்னேறிச் சென்றது; அதன் உள்ளடக்கம் மேலும் வளமடைந்தது; ஏனென்றால் அந்த சமயம், "மே 4ம் தேதி இயக்கத்தைப் பற்றி" என்று யேனனில் வெளிவந்த **சியே பாங்** ("விடுதலை") என்ற சஞ்சிகையில் மா சே-துங் எழுதிய கட்டுரையில் "சீனாவின் ஏகாதிபத்திய -எதிர்ப்பு, நிலப்பிரபுத்வ எதிர்ப்பு பூர்ஷ்வா - ஜனநாயகப் புரட்சி ஒரு புரட்சிக் கட்டத்துக்கு வளர்ந்துவிட்டது" என்று கூறியுள்ளார். அதற்குப் பின்னர், அதற்கு ஒரு பொருத்தமான விஞ்ஞானப் பெயரான "புதிய ஜனநாயகம்" என்று மா சே-துங் பெயர் சூட்டினார்.

அதே கட்டுரையில் மா சே-துங் எழுதியதாவது!

"20 வருடங்களுக்கு முன் நடந்த மே 4ம் தேதி இயக்கமானது, சீனாவின் ஏகாதிபத்திய - எதிர்ப்பு, நிலப்பிரபுத்வ

எதிர்ப்பு பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சி ஒரு புதிய கட்டத்துக்கு வளர்ந்துள்ளது என்று சுட்டிக் காட்டியது. மே 4ம் தேதி இயக்கமானது-கலாச்சார சீர்திருத்தத்திற்கான ஒரு இயக்கமாக ஆனது, சீனாவின் ஏகாதிபத்திய - எதிர்ப்பு, நிலப்பிரபுத்வ எதிர்ப்பு பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சியின் வடிவங்களில் ஒரு உருவமாகும். புதிய சமூக சக்திகள் அந்த சமயத்தில் வளர்ந்து, அபிவிருத்தியடைந்ததனால், ஏற்கனவே பலமடைந்திருந்த ஒரு முகாம், சீனாவின் ஏகாதிபத்திய - எதிர்ப்பு, நிலப்பிரபுத்வ - எதிர்ப்பு பூர்ஷ்வா - ஜனநாயகப் புரட்சியில் உதயமானது; அதாவது சீனாவின் தொழிலாளிவர்க்கம், அதன் மாணவர் பகுதி, புதிதாக எழுந்துள்ள அதன் தேசிய பூர்ஷ்வாபகுதி ஆகியவை கொண்ட முகாம் தோன்றியது. மே 4ம் தேதி இயக்க கால கட்டத்தில், லட்சக்கணக்கான மாணவர்கள் தான் இயக்கத்தின் தலைமையாக வீராவேசத்தோடு நின்றார்கள். மே 4ம் தேதி இயக்கம், 1911ம் ஆண்டு புரட்சியைவிட ஒரு படி முன்னே சென்றது என்பதை இது எடுத்துக் காட்டியது."

மேலும் மா சே-துங் கூறியதாவது:

"சீன ஜனநாயகப் புரட்சி இயக்கத்தில், படிப்பாளி மக்கள் பகுதிதான் முதலில் விழிப்புற்று எழுந்தார்கள். 1911ம் ஆண்டு புரட்சியும், மே 4ம் தேதி இயக்கமும் இந்த விஷயத்தைத் தெட்டத் தெளிவாக விளக்கியுள்ளன."

பொதுவாக மாணவர் பகுதியையும், படிப்பாளிகளையும் அரசியல் உணர்வு பெறச் செய்து அதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதில், "புது வாலிபன்" என்ற சஞ்சிகை மிகப் பெரிய பயனுள்ள பாத்திரத்தை வகித்தது. இதை முதல் முதலில் கண்டு கொண்டவர் மா சே-துங்தான்; ஹூனானுக்கு அந்த சஞ்சிகை வந்ததும் அதைப்பற்றி அவர் விளம்பரப்படுத்தினார். தனது சக-மாணவர்களுக்கு அதன் உள்ளடக்கத்தை மிகச் சுருக்கமாக திரட்டிக் கூறினார்: "**புது வாலிபனுக்கு** இரண்டு கோட்பாடுகள் உண்டு. ஒன்று—**கு - வென்னை** (பழைய முறை பாஷை) எதிர்ப்பது; பெய் - ஹுவா (சாதாரண ஜனங்களின் பாஷை)வை ஆதரிப்பது. மற்றொன்று - பழைய ஒழுக்க போதனையை

எதிர்ப்பது" மேலும் அவர் கூறினர்: "**புது வாலிபன்** எடுத்துரைப்பது. ஒன்று—விஞ்ஞானம்; இரண்டு—ஜன நாயகம். ஆகவே அந்த சஞ்சிகை கலாச்சாரம் நிறைந்தது; அத்துடன் அரசியலும் அடங்கியது."

ஆரம்ப முதல்தரப் பள்ளியில் மா சே-துங் புரிந்த செயல்கள், ஏற்கனவே புதிய ஜனநாயகத்தின்பாற்பட்டவையாயின. அவருக்கே உரித்தான நுண்ணிய தீர்க்கதரிசனங்கூறும் குணம்சத்தின் மூலம், இந்த **புதியகலாச்சார-புதிய ஜனநாயக இயக்க** அலைமீது ஆரோகணித்து நின்று அதன் ஒளிமிக்க ஈட்டிமுனையாகவும் மிளிர்ந்தார். இந்தப் புதிய எண்ண அலைகளை ஹ-ஒனனில் அவர் மோதவிட்டுப் பெருக்கி வளர்க்க முற்பட்டார். புதிய சஞ்சிகைகள் எல்லாவற்றையும் மிகக் கவனமாகப் படித்தபிறகு, இந்த இயக்கத்தின் சாரத்தை சலித்துப்பார்த்து திரட்டித்தொகுப்பார். அதே சமயத்தில், நாடு முழுவதிலுமுள்ள புதிய கலாச்சார ஊழியர்களோடு தபால்மூலம் தொடர்பு வைத்துக்கொள்ள அவர் முயன்ருர்.

## 24. பிரரன்சுக்குச் சென்று படிக்கும் மாணவர்களுக்கு சுய-உதவித் திட்டத்துக்கு ஏற்பாடு

ஆரம்ப முதல்தரப் பள்ளியிலிருந்து அவர் பட்டம் பெற்ற பிறகு, வடசீனுவிலுள்ள புதிய கலாச்சார ஊழியர்களோடு தொடர்புகொள்ள பீகிங் புறப்பட்டார் மாசே-துங். இந்த கட்டத்தில், பிரான்சில் படிப்பதற்கான சுய-உதவித் திட்டம்பற்றிய சில அச்சடித்த பிரசுரங்கள் ஹ-ஒனனுக்கு வந்தன. ஹ-ஒனனிலுள்ள அந்த இளம் மாணவர்களுக்கும், இதர மாகாணங்களிலுள்ள பலருக்கும், மத்தியதரப் பள்ளிகளிலிருந்து பட்டம் பெற்ற பிறகு மேற்படிப்புப் படிக்க வேண்டுமென்று ஆவல் கொள்ளுவோர்க்கும், ஆனல், அதேசமயத்தில் வசதியில்லாதவர்களுக்கும் இது ஒரு நல்ல சந்தர்ப்பத்தை அளித்தது. இந்தத் திட்டத்தினல் பலர் ஆகர்ஷிக்கப்பட்டனர்; காசில்லாதவர்களும் வெளிநாட்டுக்குச் சென்று படிக்க இது வசதியளிக்கிறதல்லவா! மாசே-துங், சாய்ஹோ-ஷென், மற்றும்

பலரும் ஹூனனில் இதற்கான ஒரு இயக்கத்தைத் தொடங்கி, பல இளைஞர்களைத் திரட்டினர். அந்தத் திட்டத்தின்படி, அவர்கள் **பாட்டிங்** அல்லது **பீகிங்** வரை முதலில் சென்று பிரெஞ்சு மொழி அரிச்சுவடி படித்துக் கொள்ளவேண்டும். அதன்பிறகு, ஒரு பிரெஞ்சுக் கப்பலில் அவர்கள் பிரான்சுக்குப் பிரயாணமாகவேண்டும்; அதுவும் "4 வது வகுப்பு அறையில்" (அதாவது கீழ்த் தட்டில்) பிரயாணம் செய்யவேண்டும், ஒரு விதத்தில், இந்த இயக்கம், ஹூனனிலும், வட பிராந்தியத்திலுமுள்ள புதிய கலாச்சார இயக்கங்களை ஒன்றுபடுத்துவதற்குப் பேருதவியாக இருந்தது,

சீனாவைப்பற்றிய பிரச்சினைகளையும், சீன மக்களின் விடுதலைபற்றிய பிரச்சினைகளையும் அறிந்துகொள்வதற்கு மா சே-துங் மேற்கொண்ட இதயபூர்வமான அக்கறைக்கும், ஆர்வத்திற்கும் ஆழமான வேர்விட்ட காலம் அவரது வாலிபப் பருவமாகும்; அதை எந்த சக்தியாலும் அசைக்க முடியாதபடி அது வேரூன்றிவிட்டது. சீனாவின் தேசீயப் பண்புகளையும், தேசீய உணர்வையும், தேசீய "வேலைசெய்யும் நடையையும்," அவர் உன்னதமாகப் பிரதிபலிக்கிறார். ஏழாவது கட்சி காங்கிரசில், 1945 மே 14-ம் தேதி, சீன கம்யூனிஸ்ட்கட்சி சட்டதிட்டத்தில் திருத்தம்பற்றி தோழர் **லியோ ஷோ-சி** அறிவித்த தனது அறிக்கையில் கூறியதாவது: மா சே-துங் "நமது மாபெரும் தேசத்தின் பண்புகளில் சிறந்தவற்றிற்கெல்லாம் எடுத்துக் காட்டாக விளங்கும் பிரதிநிதியாவார். அவர் சிருஷ்டித்திறம் படைத்த, பேராற்றல் நிறைந்த ஒரு மார்க்சிஸ்ட் ஆவர்; மனித சமுதாயத்தின் மிக உன்னதமான சித்தாந்தமாகிய மார்க்சிசத்தின் சர்வ வியாபகமான உண்மைகளை, சீனப் புரட்சியின் ஸ்தூலமான அநுபவத்தோடு இணைத்துப் பார்ப்பவர் ஆவர். நமது தேசீய சிந்தனை உணர்வை யாரும் எட்டிப்பிடிக்க முடியாத உச்சிக்கு அவர் உயர்த்தியுள்ளார்; வேதனைப்படும் சீன தேசத்திற்கும், சீன மக்களுக்கும், மா சே-துங் பாதையான—பரிபூரண விடுதலைக்கான பிசகற்ற ஒரே பாதையைக் காட்டியுள்ளார்."

ஆம்; பல்லாயிரம் ஆண்டுகள் நிறைந்த சரித்திரம்

கொண்டதான சீன தேசத்தின் கலாச்சார பண்புகளை, மிகவும் கவனத்தோடு மாசே-துங் ஏற்றுக்கொண்டிருக்கிறார். சீனாவின் உன்னதமான தேசீய கலாச்சாரத்தின் சிறந்த பரிபூரண பிரதிபிம்பம் ஆவார்; அவரது சிந்தனை உணர்வில் அந்த தேசீய கலாச்சாரத்தின் சிறப்புமிக்க தொடர்பினையும் வளர்ச்சியையும் மீண்டும் காணலாம், "கூட்டு சர்க்காரைப்பற்றி" என்பதில் மா சே-துங் கூறியுள்ளதுபோல, மார்க்சிசம், சரித்திரரீதியான பொருள் முதல்வாதம், தர்க்கரீதியான பொருள்முதல்வாதம் என்பதெல்லாம், "உலக முழுவதிலுமுள்ள தொழிலாள வர்க்கத்தின் சிறந்த, பிசகற்ற, மிகவும் புரட்சிகரமான, விஞ்ஞான சிந்தனையின் வடித்தெடுத்த சாரம்" ஆகும்: இந்த தேசீய சித்தாந்தத்தை ஒழுங்காக சலித்தெடுத்து, அதை பலப்படுத்தி, அதை உன்னதமாக்கி, அதற்கு ஒரு விஞ்ஞான விளக்கமும் கொடுக்க அது மாசே-துங்குக்கு உதவியுள்ளது. மார்க்சிசம் இல்லாவிடில், சீனாவின் தேசீய கலாச்சாரத்தை சலித்தெடுத்து, பலப்படுத்தி, உன்னதமாக்கி, அதற்கு ஒரு விஞ்ஞான விளக்கமும் கொடுப்பதென்பது முடியாத காரியமாகியிருக்கும், அதே சமயத்தில், சீன சரித்திரத்தையும், நாகரிகத்தையும்பற்றிய ஒரு ஆழ்ந்த உணர்வு இல்லாமல், சீன தேசீய கலாச்சாரத்தின் அடி ஆழத்திற்குச் செல்லாமல், சீன சமூகத்தைப்பற்றியும், போராட்ட அநுபவத்தைப்பற்றியும் போதிய செழுமையான ஞானம் இல்லாமல், மார்க்சிசத்தைமுறையாக, சிருஷ்டி உணர்வோடு ஏற்றுக்கொள்வதே முடியாத காரியமாயிருந்திருக்கும்; அதுவும், மார்க்சிசத்தை விளக்கமாகப்புரிந்து, கிரகித்து, அதற்கு ஒரு முறைபிசகாத சீன வடிவம் கொடுத்திருப்பதென்பது முடியாததாயிருந்திருக்கும்; அத்துடன், கட்சி சட்டதிட்டத் திருத்தத்தைப்பற்றிய அறிக்கையில் தோழர் லியோ ஷோ-சி கூறியதுபோல," அதை ஒரு புதிய சரித்திரபூர்வமான சூழ்நிலைக்கும், சீனாவின் விசேஷ நிலைமைகளுக்கும் ஏற்றவாறு பொருத்துவதும்" அது சீனாவில் வேர்விட்டுத் துளிர்க்கச் செய்வதற்கும் முடிந்திராது.

சரித்திரம், சமூகம் ஆகியவற்றில் மிகச் செழுமையான ஞானமும், போராட்டத்தில் அநுபவமும் பெற்ற மா சே-

துங்கினல், மார்க்சிசத்தை நன்கு கிரகித்து அதை முறையாகப் பிரயோகிக்கவும், மார்க்சிசத்தின் சர்வவியாபக உண்மையோடு, சீனப் புரட்சியின் 'அநுபவத்தையும் ஒன்ருக இணைப்பதற்கும் முடிந்தது. அவரது இந்த ஆற்றல்களால், சீன தேசத்திற்கும், சீன மக்களுக்கும், தங்களது விடுதலைக்குரிய ஒரே பிசகற்ற தெளிவான பாதையைக் காட்டவும், அவரால் முடிந்தது; சீன மக்களுக்கும் என்றுமே கிடைத்திராத மாபெரும் தலைவராகவும், வழிகாட்டியாகவும், ரட்சகராகவும் அவர் திகழ முடிந்தது. மா சே-துங் சிந்தனைகளும், அவரது தத்துவங்களும், நடைமுறையும் மார்க்சிசத்தை மேலும் செழுமைப்படுத்தி, அதன் சித்தாந்த பொக்கிஷத்திற்கு மேலும் பல புதிய நவரத்தினங்களை சேர்க்க உதவின.

இன்று, சீன முழுவதிலும், கம்யூனிஸ்ட் கட்சிக்கு உள்ளேயும், வெளியேயும் உள்ளவர்களில் சீனவை நன்கு புரிந்துகொண்ட மனிதர் மா சே-துங்தான், அத்துடன், சில நாடுகளின் நிலைமைகளைப்பற்றியும் நன்கு அறிந்து தெளிந்தவரும் அவரேதான். பல வெளிநாட்டார்கள், அவரை பேட்டிகண்ட பிறகு, வெளி நாடுகள்பற்றிய அவரது அபார ஞானத்தைக்கண்டு பிரமித்துப் போயினர், (வெளிநாடுகளிலிருந்து வந்த விருந்தினர்களிடம் அவர்கள் நாடுகளிலுள்ள பல்வேறு விஷயங்களைப்பற்றி அவர் கேள்விகள் போடுவார். அவர்கள் அவரிடம் கேட்கும் கேள்விகளை விட, அவர் போடும் கேள்விகளே அதிகமாயிருக்கும்.) "சீனக்கல்வியிலும்," "மேற்குநாட்டுக் கல்வியிலும்" அவருக்கிருந்த பயிற்சி (சீர்திருத்த இயக்கத்தின்போது மிகப் பெரிதாக பறைசாற்றப்பட்ட இந்த இரண்டு பதங்களுக்கும் ஒரு புதிய அர்த்தம் கொடுக்கும் அளவுக்கு) மிகவும் ஆழமானதாகவும், உன்னதமானதாகவும் இருந்தது. இது அவருக்குப் பொருத்தமானதே; ஏனென்ருல், அவரது குழந்தைப் பருவம் தொட்டே பலவருட காலமாக கடினமான முயற்சியாலும், இடைவிடாத சுய-கல்வியாலும் அவைகளை அவர் பெற்ருர்.

## 25. பீகிங் நகரில்

மா சே-துங், சுய-முயற்சித் திட்டத்தின்கீழ் பிரான்சுக்குச் செல்லத்திட்டமிட்டுள்ள அவரது பல நண்பர்களுடன் பீகிங் வந்து சேர்ந்தார்; அப்பொழுது யாங் ஹுவாய்-சுங் பீகிங் சர்வகலா சங்கத்தில் ஆசிரியராக இருந்தார். அவரது இல்லம் ஹோமென்னுக்கு வெளியே இருந்தது. சாங்ஷா நாட்கள் மாதிரியே, ஆரம்ப முதல்தரப்பள்ளியைச் சேர்ந்த இளம் மாணவர்கள், அவரைப் பார்க்கத்தவறுது போவார்கள்; யாங் ஹுவாய்-சுங்கும் அவர்கள்மீது மாருத அன்பு வைத்திருந்தார்.

இந்த புராதன தலைநகரத்தில் ஒரு விடுதியில் தங்கியிருந்த மா சே-துங் மிகவும் சிக்கனமான வாழ்க்கை நடத்திஞர், பீகிங் வந்துசேர அவர் கடன் வாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தார்; அங்கு வந்தடைந்ததும் ஏதாவது வேலைதேட ஆரம்பித்தார். பேராசிரியர் யாங் ஹுவாய்-சுங் சிபார்சின் பேரில், பீகிங் சர்வகலாசங்க நூல்நிலையத்தில் அவருக்கு உதவிகுமாஸ்தா வேலை கிடைத்தது. அவரது வேலையில், புத்தகங்கள், பத்திரிகைகள் படிக்கும் வாசகர்கள் எல்லோரது பெயர்களையும் பதிவு செய்வதும் ஒன்ருகும். அவருக்கு மாதம் 8 டாலர் சம்பளம்.

பீகிங் சர்வகலாசங்கத்தில் பேராசிரியராயிருந்த லீ டா-சாவ் என்பவர்தான் நூல்நிலைய அதிகாரி. அவர் ஒரு பிரபலமான, முற்போக்கு அறிஞர்; இவர்தான் முதல்முதலில் ருஷ்ய அக்டோபர் மகாபுரட்சியையும், மார்க்சிசத்தையும் சீனுவுக்கு அறிமுகமாக்கியவர். சீனகம்யூனிஸ்ட்கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவர் அவர்; வடசீனுவின் கட்சித் தலைவர்களில் சிறந்தவர்; அவருக்கு 40 வயது நிரம்பா முன்னரே 1927-ல் பீகிங்நகரில், சாங் சோ-லின் என்ற தனிக்காட்டு ராஜாவால் கழுத்தை நெறித்து அவர் கொல்லப்பட்டார்.

பீகிங்கில் இருந்தபொழுது, யாங் ஹுவாய்-சுங் மகள் யாங் கே-ஹுய் மீது மா சே-துங் காதல்கொண்டார். அவள் ஒரு அமைதியான, தீவிரசிந்தனை கொண்ட பெண்; அவள் பெற்ருேர் அவளுக்கு அற்புதமான கல்விப்பயிற்சி கொடுத்தனர். அவள் அப்பாவிடமிருந்து மா சே-துங்கின் அற்புத

குணும்சங்களைப்பற்றி நன்கு அறிந்திருந்தாள்; அந்த இளம் உள்ளங்கள் இரண்டும் பல வருடங்களாக ஒருவரை யொருவர் நன்கு புரிந்திருந்தன. அதற்குப்பிறகு, சாங்ஷா வில் அவர்களுக்குத் திருமணம் நடந்தது.

சிங்காங்ஷான்னுக்கு மேலே புரட்சி ராணுவத்தை மா சே-துங் தலைமைதாங்கி நடத்திச் சென்றபோது, அவரது மனைவி ஹுனானில் தங்கிவிட்டாள்; அங்கு எதிர்ப்புரட்சிக்காரர்களால் அவள் கைது செய்யப்பட்டாள். மா சே-துங்கை துறக்கும்படி அவளை நிர்ப்பந்தப் படுத்த அவர்கள் என்னென்னவோ முறைகளைக்கையாண்டு பார்த்தார்கள்; ஆனல் அதற்கு அவள் முடியவே முடியா தென்று மறுத்துவிடவே, அவள் கொல்லப்பட்டாள். அவள் கொலை செய்யப்பட்ட செய்தி, நாட்டை ஒரு குலுக் குக் குலுக்கிவிட்டது.

பீகிங் நகரில், பீகிங் சர்வகலாசங்க நூல்நிலையத்தில் வேலை பார்த்துக்கொண்டே, மா சே-துங், தனது பிரத்தி யேகமான பாடங்களைத் தொடர்ந்து படிக்க, முன்போலவே வாசிப்பதும், கேள்விகள் போடுவதுமான அதே முறை களைக் கைக்கொண்டார். அவரையும் ஹுனானிலுள்ள அவரது பழைய பள்ளித் தோழர்கள் சிலரையும், பீகிங் நகரிலுள்ள பல அறிஞர்களிடத்திலும், பிரபலமான புருஷர்களிடத்திலும் பேராசிரியர் யாங் அறிமுகப்படுத்தி வைத்தார்; அந்த இளைஞர்கள் அந்த பிரபல புருஷர்களை அடிக்கடி கண்டு சில பொன்னுரைகளைக் கேட்பர். புதிய கலாச்சார இயக்கத்தின் நாகரிகத் "தலைவர்கள்" சிலர்-தென் பிராந்திய நடைப்பேச்சிலேயே பேசுகின்றவர், நூல் நிலையத்தில் ஒரு அற்ப குமாஸ்தாவாக வேலைசெய்கின்றவர் என்று அவர்கள் கருதுகிற ஒருவரைப்பற்றி அதிக நேரத் தைச் செலவழிப்பது சிலாக்கியமல்ல என்று அவர்கள் கரு தியபோதிலும், மா சே-துங், பீகிங்கில் படிப்படியாக முன் னேறிச் சென்றுகொண்டிருந்தார்.

அதே காலகட்டத்தில், அராஜகத்தைப் பிரச்சாரம் செய்யும் சில துண்டுப்பிரசுரங்கள் மா-சே-துங் கண்களிற் பட்டன. சிறிதுகாலம், இதர பல சீன இளைஞர்களைப்

போலவே, அதனுல் அவரும் ஆகர்ஷிக்கப்பட்டு நின்ருர். ஆனுல் அதிவிரைவிலேயே, இந்தப் பிடிப்பிலிருந்து தன்னை அவர் விடுவித்துக்கொண்டு, கம்யூனிசத்தின் விஞ்ஞானத் தத்துவங்களில்நாட்டம்செலுத்தினுர். பீகிங் சர்வகலாசாலையில் தத்துவசாஸ்திரம் பயிலும் குழுவிலும், பத்திரிகைத் தொழில் பற்றிப் பயிலும் மற்ருெரு குழுவிலும் அவர் சேர்ந்தார்.

இந்தக் காலகட்டத்தில், அரசியல் சிந்தனைகளிலும், கல்விசம்பந்தமான சிந்தனைகளிலும் கவனம்செலுத்த மா சே-துங் ஆரம்பித்தார்.

## 26. புரட்சிப் பணிகளில் இரண்டறக் கலந்தார்

**(மே 4-ம் தேதி இயக்கம்-மாணவர், இளைஞர் இயக்கம்-ஸியாங் சியாங் சஞ்சிகை ஆசிரியர்)**

பிரான்சிற்குப் படிக்கச் செல்லும் மாணவர் குழாத்தினரோடு, ஷாங்கை நோக்கி மா சே-துங் பிரயாணம் செய்தார்; ஆனுல் அவர் வாங்கிய பிரயாணச்சீட்டைக் கொண்டு, டியன்ட்சின் வரைக்கும்தான் போகலாம். ஒரு நண்பர் அவருக்கு 10 டாலர் கடனுகக் கொடுத்தார்; அவர் செல்லும் வழியில் டைஷான் மலையில் ஏறிப்பார்த்துவிட்டு, அதன்பின்னர் **கன்பூஷியஸ், யென் யுவான், மென்ஷியஸ்** போன்ற புராதன ரிஷிகளின் பிறந்த இடங்களையும், சமாதிகளையும் பார்த்துவிட்டு கடைசியாக பூகோவ் சென்றடைந்தார். கடைசியில் அவர் கையில் இரு செப்புக் காசுகள்தான் மிச்சமிருந்தன. அவரது செருப்பு வழியில் திருட்டுப் போய்விட்டது; இதனுல் மா சே-துங்கின் நிலைமை மேலும் மோசமாகிவிட்டது. ஆனுல், அந்தப் பரிதாப நிலையிலிருந்து அவருக்கு நிவாரணம் கிடைத்தது; ஹுனுனிலிருந்துவந்த ஒரு பழைய நண்பர், அவர் ஷாங்கை போய்ச் சேரும்வரை ஆகும் செலவுக்கும், ஒரு ஜோடி செருப்பு வாங்குவதற்குமுரிய பணத்தைக் கடனுகக் கொடுத்தார். பிரான்சுக்குச் செல்லும் அவரது மாணவ நண்பர்கள், இயக்கத்தின்போது அவர்கள் வசூலித்த பணத்திலிருந்து

ஒரு சிறு தொகையை, ஹுனானுக்குச் செல்லும்வரைக்கும் மா சே-துங் குக்கு உதவும்படியாகக் கொடுத்தனர்.

சாங்ஷா எதிரிலுள்ள சியாங் நதியின் மறுகரையி லுள்ள யூலு கல்விக் கழகத்தில் நிறுவப்பட்டிருந்த "ஹுனான் சர்வகலா சங்க ஸ்தாபனத்திற்கான தற்காலிகக் காரியாலயங்களில்" அவர் ஜாகை பிடித்தார். பழைய சிக்கன வாழ்க்கையான-பெரிய மொச்சையும், சாதமும் கொண்ட ஒரு நாளைக்கு ஒருவேளை உணவு உட்கொள்ளும் வழக்கத்தை அவர் மறுபடியும் கைக்கொண்டார். ஆயினும் அவரது அரசியல் நடவடிக்கைகளையும் நடத்திக்கொண்டு தானிருந்தார்; முதன்மையாக, மாணவர் இயக்கத்தை மேலும் உற்சாகத்துடன் நடத்தினுர்.

அது, முதல் உலகமகாயுத்த காலகட்டமும், அது முடிந்த தருணமுமான சமயம்;

"......சீனுவின் முதலாளித்வ பொருளாதாரம் மேலும் ஒருபடி அபிவிருத்தி யடைந்தது; சீனதேசம் விடுதலை பெறுவதற்கான புதிய நம்பிக்கைகள் பிறந்தன; ஏனென் ருல், சீனுவின் புரட்சிகரமான படிப்பாளிகள் கீழ்க்கண்ட வற்றைக் கண்டனர்: ருஷ்யா, ஜெர்மனி, ஆஸ்ட்ரியா-ஹங்கேரி ஆகிய மூன்று பெரிய ஏகாதிபத்திய வல்லரசு களும் முறிந்தன; மற்ற இரண்டு வல்லரசுகளான பிரிட் டனும், பிரான்சும் பலஹீனப்பட்டன; அதேசமயத்தில் ருஷ்ய தொழிலாளி வர்க்கம் ஒரு சோஷலிச அரசை நிறு வியது; ஜெர்மன், ஆஸ்ட்ரிய (ஹங்கேரியன்), இத்தாலிய தொழிலாளிவர்க்கம் புரட்சி செய்ய எழுந்தது."

(புதிய ஜனநாயகம்)

ருஷ்யாவில் நடந்த உலகத்தை உலுக்கிய அக்டோபர் சோஷலிச மகாபுரட்சியும், விசேஷமாக லெனின், ஸ்டாலின் தலைமையில் நின்ற போல்ஷ்விக் கட்சியின் தேசீயக் கொள்கையும் சீனமக்கள்மீது விலைமதிக்கமுடியாத ஒரு தன்மையை பிரதிபலித்து நின்றன.

இதை வெகு அழகாக ஸ்டாலின் சித்தரித்துள்ளார்;

"கீழ்நாட்டின் அடக்கப்பட்ட மக்களின் உழைப்பாளிப் பகுதி, யுகக்கணக்கில் உறங்கிக்கிடந்த நிலையை உதறித்தள்ளி, அவர்களை உலக ஏகாதிபத்தியத்திற்கு எதிரான போராட்டத்தில் இழுக்கவும் உதவிய அக்டோபர் மகா புரட்சி, உலகச்சரித்திரத்தில் ஏற்பட்ட முதல்புரட்சியாகும். ருஷ்யாவிலுள்ள சோவியத்துக்களின் முன்மாதிரியைப் போல, பாரசீகம், சீனு, இந்தியாவில் தொழிலாளர், விவசாய சோவியத்துக்கள் ஏற்பட்டதானது, இதற்குப் போதிய ருசுவாகும்"

மா சே-துங் சரியாகச் சொன்னதாவது :

"அந்த சமயத்தில் உலகப் புரட்சியின், ருஷ்யப் புரட்சியின், லெனினின் அறைகூவலுக்கிணங்க மே 4-ம் தேதி இயக்கம் பிறந்தது."

(புதிய ஜனநாயகம்)

1918 ல் முதல் உலக மகாயுத்தம் முடிந்த பிறகு நடந்த பாரிஸ் சமாதான மகாநாட்டில் சீனுவுக்கு ஏற்பட்ட ராஜ தந்திரத் தோல்வியானது, சீன மக்களின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டது. ஜப்பானின் 21 நிபந்தனைகளை ரத்துசெய்ய வேண்டுமென்ற சீனுவின் வேண்டுகோள் புறக்கணிக்கப்பட்டது; மகாநாடு மேற்கொண்டுள்ள விவாதத்திற்கு இது உட்பட்டதல்ல என்று சால்ஜாப்பு கூறப்பட்டது; ஆனுல் அதேசமயத்தில், சீனுவை கொள்ளையடிப்பதற்கு யுத்தத்தை சாதகமாக உபயோகிக்க முனைந்த ஜப்பானுக்கு, முன்னர் ஷான்ட்டங்கில் ஜெர்மனிக்கிருந்த சகல விசேஷ உரிமைகளும் கொடுக்கப்பட்டன.

பீகிங் நகரில், 1919 மே 4 ம் தேதி, 5 ஆயிரம் மாணவர்களும், சாதாரண பிரஜைகளும் அடங்கிய ஒரு ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. "ஜப்பானேடு நேரடிப் பேச்சு வார்த்தை நடத்தாதே!", சகல துரோகிகளும் ஒழிக!", "சமாதான உடன்படிக்கையில் நாங்கள் கையெழுத்திட மாட்டோம்!", "21 கோரிக்கைகளை ரத்து செய்!" "சிங்டோவை எப்படியாயினும் மீட்போம்!" "பதவி மோக அரசியல் ஒழிக!", "ஜப்பானிய சாமான்களை பகிஷ்கரி!"

போன்ற கோஷங்கள் தெருவெல்லாம் முழங்கின. செளசியா லூ*வில் இருந்த சாவ் ஜு-லின் வீட்டிற்கு மக்கள் தீவைத் தனர்; சாங் ஸுங் சியாங் என்ற துரோகிகளில் ஒருவனை நையப்புடைத்தனர்.

டுவான் சி-ஜுய் சர்க்கார், போலீசையும், ராணுவப் போலீசையும் அனுப்பி ஆர்ப்பாட்டத்தைக் கலைத்து, 32 மாணவர்களைக் கைது செய்தது. அடுத்த நாள், பிகிங் நகரிலுள்ள சகல மாணவர்களும் வேலை நிறுத்தம் செய்த னர். **பீகிங் கல்லூரி, மத்தியதரப் பள்ளி மாணவர்கள் சங்கம்** என்ற ஒன்று அன்றே நிறுவப்பட்டு, கண்டனத் தந்திகள் அனுப் பவும், பிரச்சார துண்டுப் பிரசுரங்கள் வெளியிடவும், கண்டனக் கூட்டங்கள் நடத்தவும் அதிகாரமளிக்கப் பட்டது.

இந்த இயக்கம், நாடு முழுவதிலும் மின்சாரம் பாய்ந் தது போல் பரபரப்பை உண்டு பண்ணியது. டியன்ட்சின், ஷாங்கை, நாங்கிங், ஊ ஹானிலும், குவாங்டங், குவாங்சி, பூக்கியன், ஷான்சி, ஷென்சி. செக்கியாங், கியாங்சி, ஹுனன் மாகாணங்களிலும், வடகிழக்குப் பிராந்தியத்தி லும் உள்ள மாணவர்கள் ஆவேசங்கொண்டு சீறி யெழுந் தனர். வேலை நிறுத்தங்கள், கண்டனக் கூட்டங்கள்,

---

* ஷான்டங் தீபகற்பத்தில் கெய்சர் ஜெர்மனிக்குச் சேர்ந்த இடங் களையும், உரிமைகளையும், சலுகைகளையும் ஜப்பான் அனுபவித்துக் கொள்ளலாம் என்று வார்சேல்ஸ் மகாநாட்டில் முடிவு செய்யப்பட்டது என்ற செய்தி சீனுவுக்கு வந்ததும், சீனமக்களிடையே ஆத்திரம் பொங்கி வழிந்தது. டியன் ஆன் மென் முன்பாக ஆர்ப்பாட்டம் செய்த 5 ஆயி ரம் மாணவர்கள், பிறகு துரோகி சாவ் ஜு-லின் வசித்த செள சியா லூவை நோக்கிச் சென்றுர்கள்; இந்த துரோகிதான், 1915 ல் ஜப்பா னுல் திணிக்கப்பட்ட 21 கோரிக்கைகளில் கையெழுத்திட்டவன். அவன் வீட்டில் 4 பேர் கூடிப்பேசிக்கொண்டிருந்ததை மாணவர் கூட்டம் கண்டது; ஜப்பானில் ஸ்தானிகராயிருந்த சாங் ஸுங்-சியாங், சர்க்கார் தங்கநாணய டைரெக்டரான லூசுங்-யூ, சாவ் ஜு-லின்னும், ஒரு ஜப்பானியனும் இருக்கக் கண்டது. சாங் ஸுங்-சியாங் மீது மாண வர்கள் பாய்ந்து சரமாரியாக உதைகள் கொடுத்தனர். மற்ற மூன்று பேரும் அந்தக் குழப்பத்தில் தப்பி ஓடிவிட்டனர். ஆத்திரங் கொண்ட மாணவர்கள் சாவ் ஜு-லின் வீட்டுக்குத் தீ வைத்தனர்.

ஜப்பானிய சாமான் பகிஷ்காரம் ஆகியவை காட்டுத்தீ போல் பரவின. நாட்டின் மூலைமுடுக்குகளிலுமுள்ள மாணவர்களும், படித்த இளைஞர்களும் இந்த ஜப்பானிய-எதிர்ப்பு இயக்கத்தில் குதித்தனர். ஸ்தாபன ரீதியாகத் திரண்டு செயலில் இறங்க வேண்டுமென்ற கோரிக்கை ஏக மனதாக எழுந்தது.

அப்பொழுது மா சே-துங், சாங்ஷாவில் இருந்தார். ஹூனனிலும் மே 4ம் தேதி இயக்கத்தைப் பரப்புவதற்காக, ஒரு சுருக்கமான ஆனால் ஆவேசமூட்டும் ஒரு வேண்டுகோளை அவர் எழுதி விநியோகித்தார். "தாய் நாட்டு சோதரரே, எழுவீர்!" என்பதுதான் முதல் வாக்கியம். ஹூனன் மாணவர்களை செயலில் இறங்கும்படி அது தூண்டிற்று.

**ஹூனன் மாணவர்கள் சங்கம்** என்ற ஒன்று நிறுவப்பட்டு, **ஸியாங் சியாங்** சஞ்சிகை என்ற அதன் சொந்த வெளியீடும் கொண்டுவரப்பட்டது. அந்தப் பெயரை மா சே-துங் பிரரேபித்து அதன் ஆசிரியராகவும் ஆனர், அந்த சஞ்சிகையின் முன்னுரையை ஆசிரியர் தீட்டினர்; சஞ்சிகையின் பாதிப் பகுதியை அது நிரப்பியது. கனல் கக்கும் நடையில் எழுதியிருந்த ஆவேச வாசகங்கள், வாசகர்களை திக்பிரமை கொள்ளவைத்தன.

ஏகாதிபத்தியம், நிலப்பிரபுத்வம், காட்டுராஜா தர்பார் ஆகியவற்றை எதிர்த்தும், ஜனநாயகம், விஞ்ஞானம், புதுமைக் கலாச்சாரம் ஆகியவற்றை எடுத்துரைத்தும் வந்த வெளியீடான **ஸியாங் சியாங்** சஞ்சிகை, ஹூனனிலும் இதர இடங்களிலுமுள்ள மாணவர், இளைஞர் இயக்கங்களுக்குப் பெரும் எழுச்சியை ஊட்டியது; ஹூனனிலுள்ள சகல படிப்பாளிகள், கல்விமான்கள், கல்விக் கழகங்கள் ஆகியோரிடையே அவர்களது முற்போக்கு, புரட்சித் துறைகளில் முன்னேறுவதற்கு அது ஆதர்சமாயிருந்தது. உண்மையில், அந்த சஞ்சிகை மிகவும் முக்கியமான பங்கு வகித்தது; பழைய ஒழுக்கமுறைகளுக்கு நேர் எதிராக புதுமைக் கலாச்சாரத்தை அந்த சஞ்சிகை எடுத்துரைத்ததோடு மட்டுமல்லாமல், மக்களின் புரட்சி இயக்கங்களின் ஸ்தாபகனுகவும் அது விளங்கிற்று. யதார்த்தமான சமூகப் பிரச்

சினைகள் பற்றிய விவாதங்கள் அந்த சஞ்சிகையில் அடிக் கடி வெளிவரும், படித்த இளைஞர்களையும், மாணவர்களை யும் செயல்புரியத் தூண்டுவதும், அவர்களை பொதுமக்க ளோடு ஒன்று பட்டு நிற்கச் செய்வதும்தான் அதன் கொள் கையின் நோக்கமாகும். விடுமுறைகளில் வீடு திரும்பும் மாணவர்கள் பொதுஜன ஸ்தாபன வேலை செய்யும்படி அவர் களுக்கு அறைகூவல் விடுக்கும். கோடை விடுமுறைக்கு வீடு திரும்பும் மாணவர்களுக்கு வழிகாட்டியாக அந்த சஞ்சிகையில் எழுதப்பட்ட தலையங்கத்தின் தலைப்பு "மக் களின் பிரமாத ஒற்றுமை" என்பதாகும். ஹூனன் மாணவர்கள் சங்கமும், பல பள்ளிகளில் படிக்கும் மாண வர்களுக்கு, "வீடு திரும்பியதும் வேலையில் ஈடுபடுங்கள்" என்ற குழுக்களை ஏற்பாடு செய்வதற்கான அறைகூவல் விடுத்தது. வீடு திரும்பிய மாணவர்களில் பெரும்பாலோர் உன்னூரிலுள்ள படித்த இளைஞர்களோடு சேர்ந்து நின்று "பல வேஷ பிரசங்க குழுக்களை" அமைத்தனர்; அவர்கள் ஸ்தாபனத்தை விரிவுபடுத்தவும், பிரச்சார வேலையைப் பெருக்கவும் முற்பட்டார்கள். மேலும், அந்த சங்கம், "10 பேர் கொண்ட தேச பக்த கோஷ்டிகள்" என்றும், "எதிரியின் பொருள்களாவென்று பரிசீலனை செய்யும் கோஷ்டிகள்" என்றும் ஏற்படுத்தி ஜப்பானியப் பொருள் கள் பகிஷ்காரத்தை நடத்த முற்பட்டது. சில காலத்திற்கு அந்த மாகாணத்திலுள்ள பல பள்ளிகள் சொந்த வாரப் பத்திரிகைகளை நடத்தின. அப்பொழுது புரட்சிப் பிரச் சாரம் செய்யும் துறையில் முதன்மையாக நின்ற **ஸியாங் சியாங்** சஞ்சிகை, அவர்களை யெல்லாம் ஒன்று திரளும்படி அறைகூவல் விட்டது. அதன் விளைவாக "வார பத்திரிகை கள் சங்கம்" என்ற ஸ்தாபனம் ஏற்பட்டது. அதிலிருந்து பல சஞ்சிகைகளின் மூலம் செய்யப்பட்டு வந்த பிரச்சாரம் ஒருங்கே இணைக்கப்பட்டு நல்ல பயனளித்தது. சொற்ப காலத்திற்குள்ளாக, அந்த மாகாண முழுவதுமுள்ள மாண வர்கள், படித்த இளைஞர்கள் ஆகியோரின் சிந்தனையானது முழுவதும்மாறி ஒரு புதிய அம்சம் பெற்றது; இதற்குப் பெரிதும் காரணம், **ஸியாங் சியாங்** சஞ்சிகையும் அதன் ஆசிரியருமேயாகும். புரட்சிகரமான பத்திரிகைத் தொண்டு, தயவு தாட்சண்யமற்ற பிரசுர வெளியீடுகள் ஆகியவற்

ளோடு, சமூக, அரசியல், கலாச்சார நடவடிக்கைகளிலும் மா சே-துங் கலந்து கொள்ள முற்பட்டதற்கு இது எடுத்துக்காட்டாக இருந்தது. அவரது ஆரம்ப புரட்சிப் பணியின் சரித்திரத்தில் மிக உணர்ச்சிகரமான அத்தியாயமாக அது விளங்கிற்று. அந்த சஞ்சிகை கடைசியாக தடை செய்யப்பட்டுவிட்டது.

அப்பொழுது, நாடு முழுவதிலுமுள்ள மாணவர் பிரதிநிதிகள் ஷாங்கையில் வந்து குவிந்தார்கள். 1919 ஜூன் 16-ல், தேசிய மாணவர்கள் சங்கம் நிறுவப்பட்டது. வியாபாரிகளையும், தொழிலாளர்களையும் சேர்த்துக் கொள்ளும் அளவுக்கு வேலை நிறுத்தம் விரிவடைந்ததும், மே 4-ம் தேதி இயக்கம் ஒரு புதிய கட்டத்தை அடைந்தது.

"அது ஜூன் 3-ம் தேதி இயக்கமாக* மாறிய உடனே, படிப்பாளிகள் மட்டுமல்ல, தொழிலாளி வர்க்கத்தின் விரிந்த பகுதியும், குட்டி பூர்ஷ்வாக்களும், பூர்ஷ்வாக்களும் பங்கு கொண்டார்கள்; அது, தேசவியாபகமான அளவுக்குப் பரந்த ஒரு புரட்சி இயக்கமாக மாறியது."

(புதிய ஜனநாயகம்)

முதலாளித்வம் பிறந்த அதே நேரத்தில், சீனத்தொழிலாளி வர்க்கமும் பிறந்தது. **சீனப் புரட்சியும், சீன கம்யூனிஸ்ட் கட்சியும்** என்ற நூலில் மா சே-துங் குறிப்பிட்டுள்ளது போல, அது, "வயதிலும், அநுபவத்திலும் பார்க்கப் போனால் சீன முதலாளித்வத்திற்கும் மூத்ததாகும்"; ஏனென்றால் "சீனத் தொழிலாளிவர்க்கம் பிறந்து வளர்ந்தது, சீன தேசிய பூர்ஷ்வாக்களோடு சேர்ந்தே ஏற்பட்டது மட்டுமல்லாமல், சீனவில் ஏகாதிபத்தியம் நேரடியாக நடத்திய தொழில்களின் விளைவாகவும் பிறந்ததாகும்". மேலும்,

---

*ஜூன் 3-ம் தேதி, பீகிங் நகர மாணவர்கள் ஒருவர் பாக்கியில்லாமல் திரண்டு, நகர வீதிகளிலே மக்களிடையே பிரசங்கம் புரிய ஆரம்பித்தனர். ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் கைது செய்யப்பட்டனர். இந்த செய்தி ஷாங்கைக்குப் பரவியதும், சகல வியாபாரிகளும், மாணவர்களும், தொழிலாளர்களும், மாணவர்களை ஆதரித்து வேலை நிறுத்தத்தில் இறங்கினர்.

"முதலாவது ஏகாதிபத்திய உலக மகாயுத்தத்தின்போது, சீனாவின் தேசியத் தொழிலும்...மேலும் வளர்ச்சியடைந்தது;". ஆகவே, சீனத் தொழிலாளிவர்க்கம் மேலும் முன்னேற்ற மடைந்துதானிருந்தது.

மே 4-ம் தேதி இயக்கத்தில் இந்த பலம்வாய்ந்த தொழிலாளிவர்க்க சக்தி சேர்ந்ததும், புரட்சி இயக்கத்திற்குப் புத்துயிர் ஊட்டியதுபோலிருந்தது, ஜுன் 5-ம் தேதி, சுமார் 70 ஆயிரம் ஷாங்கை தொழிலாளர்கள்-பாத்திரத் தொழிலாளர்கள், யந்திரக் கருவிகள், பஞ்சாலைகள், அச்சுத் தொழிற்சாலைகள், நீராவித் தொழிற்சாலைகள், ரயில்வேக்கள், டிராம்வே, பஸ், டெலிபோன் கம்பனிகள், எண்ணெய், தீப்பெட்டி தொழிற்சாலைகள், காகிதத் தொழிற்சாலைகள், புகையிலை கம்பனிகள் ஆகியவற்றிலுள்ளவர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். டாக்ஸி ஓட்டும் டிரைவர்கள், தெருக்கூட்டுபவர்கள், ஹோட்டல் தொழிலாளர்கள், சித்திரவேலைக்காரர்கள், கட்டிடத் தொழிலாளர்கள் ஆகியோரும் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டனர். ஷாங்கை—நாங்கிங் ரயில்வே தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் குறிப்பாக செல்வாக்கை உண்டுபண்ணிற்று. அதே தினத்தில், ஷாங்கை வியாபாரிகளும் கடைகளை மூடினர்; நாங்கிங், ஹாங்சோ, கியூகியாங், டியன்ட்சீன், ஊஹான், ஆமாய் ஆகிய இதர நகரங்களும், ஷான்டங், ஆன்வேய் மாகாணங்களும் அதே முறையில் கடைகளை மூடின. டாங்ஷானிலுள்ள பீகிங்—முக்டன் ரயில்வே தொழிலாளிகளும், சாங்ஸின்டியனிலுள்ள பீகிங்—ஹாங்கோ ரயில்வே தொழிலாளிகளும் பிரமாண்டமான ஆர்ப்பாட்டங்களை நடத்தினர். ஜுன் 6-ம் தேதியன்று துரோகிகளைத் தண்டிக்க வேண்டுமென்று கோரி, ஷாங்கை அகில வட்டார சங்கம் பீகிங்குக்குத் தந்திகொடுத்தது. பீகிங் சர்க்காருக்கு வேறுவழியில்லை. ஜுன் 9-ம் தேதி, செள ஜு-லின், லூ சுங்-யூ, சாங் ஸுங்-சியாங் ஆகிய மூன்று ஜப்பானிய-ஆதரவு அரசியல்வாதிகளுக்கு உத்தியோகத்திலிருந்து சீட்டுக்கிழிக்கப்பட்டது; பாரிஸ் சமாதான உடன்படிக்கையில் சீனா கையெழுத்திடாது என்று ஒரு அறிக்கை விடப்பட்டது. இது, பாரிசுக்குச் சென்ற சீனப் பிரதிநிதி

கள், உடன்படிக்கையில் கையெழுத்திட மறுத்த ஜூன் 28-ம் தேதியன்று ஊர்ஜிதம் செய்யப்பட்டது. இந்தச் செய்தி உடனே உலக முழுவதும் பரவி ஒரு பெரிய அதிர்ச்சியை உண்டாக்கிவிட்டது.

இந்த ஏகாதிபத்திய-எதிர்ப்பு, நிலப் பிரபுத்துவ எதிர்ப்பு இயக்கத்தைத்தொடர்ந்து,புதிய கலாச்சார இயக்கமானது, அதன் ஆரம்ப உருவத்தில், இதுவரை அரசியல் இயக்கத்திற்கு உதவி வந்ததுபோக, படிப்படியாக நாட்டின் ஒவ்வொரு மூலைமுடுக்குகள்தோறும் பரவியது. பழைய ஒழுக்க முறைக்கு எதிர்ப்பும் புதுமையை ஆதரிப்பதும், பழையஇலக்கியத்தை எதிர்ப்பதும் புதுமைஇலக்கியத்தை ஆதரிப்பதும் ஆகிய "கலாச்சாரப் புரட்சியின் இரு பதாகைகளில்" அது வெளிப்பட்டது. புயல்போல நாடுமுழுவதும் வீசிப்பாய்ந்தது. பல புதிய பத்திரிகைகள், சஞ்சிகைகள், வெளியீடுகள், அறிவுத் தொகுப்பு நூல்கள் வெளியிடப்பட்டன. **லிடா-சாவ்** அரசியல் கட்டுரைகளும், **லூசூன்** நவீனங்களும், சிறுகதைகளும் இந்தக் காலகட்டத்தில் எழுதப்பட்டவையாகும். (1918 அக்டோபரில், **புதிய வாலிபன்** என்ற இதழில், "பொதுஜனங்களின் வெற்றி," "போல்ஷ்விசத்தின் வெற்றி" என்ற நூல்களை லிடா-சாவ் வெளியிட்டார். அதன்பிறகு, 1919 மே மாதத்தில், "மார்க்சிசத்தைப்பற்றிய எனது கருத்துக்கள்" என்ற மார்க்சிசத்தைப் பற்றிய ஒரு விரிவான விளக்கநூலை அவர் வெளியிட்டார், இது சீனுவிற்கு விஞ்ஞான சோஷலிசத்தை அறிமுகப்படுத்திவைப்பது போலானது.)

"முதலில், "மே. 4-ம் தேதி இயக்கத்தின்போது, சீன கம்யூனிஸ்ட்கட்சி என்று இன்னும் ஸ்தாபிக்கப்படாமலிருப்பினும், ருஷ்யப் புரட்சியை ஆதரித்தவர்களும், கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தைப் பற்றிய ஆரம்பஞானம் கொண்டிருந்த படிப்பாளிகள் ஏராளமானவர்களும் இருந்தனர். ஆரம்பத்தில், மே 4-ம்தேதி இயக்கமானது மூன்றுபகுதி மக்களைக்கொண்ட ஐக்கிய முன்னணியின் புரட்சி இயக்கமாக இருந்தது; அதாவது, கம்யூனிஸ்ட் படிப்பாளிகள், புரட்சிகரமான குட்டிபூர்ஷ்வா படிப்பாளிகள், பூர்ஷ்வா படிப்பாளிகள் (இவர்கள்தான் அப்பொழுது

இயக்கத்தின் வலதுசாரியாக இருந்தவர்கள்) ஆகிய மூன்று பகுதி மக்களாகும்."

(புதிய ஜனநாயகம்)

ஆனால், அதன்பின்னர், இந்தப் புரட்சி இயக்கத்தில் கலந்துநின்ற படிப்பாளிகளும், ஐக்கிய கலாச்சார சித்தாந்த முன்னணியில் சேர்ந்து நின்ற படிப்பாளிகளும் இரண்டு முகாம்களாகப் பிரிந்தனர். **லி டா-சாவ், மா சே-துங், சூ சியூ-போ, யுன் டாய்-யிங்**, இன்னும் இதர தோழர்களை யும் தூண்களாகக்கொண்ட ஒரு முகாம் தீவிர புரட்சிகர ஜனநாயகத்திலிருந்து தொழிலாளிவர்க்க சோஷலிசத் திற்கு அதாவது கம்யூனிசத்திற்கு முன்னேறிச் சென்றது.

ஹூ ஷீ பிரதிநிதித்வப்படுத்திய மற்ற முகாம், அநுபவ சித்தாந்த வாதத்தை நோக்கிச் சென்றது (Pragmatism); "தத்துவங்களை (Isms)ப்பற்றிப் பேசுவதைவிட பிரச் சினைகளைப்பற்றி அதிகமாகப் படிக்கவேண்டும்" என்று எடுத்துக் கூறியது. அதனால் **பிரச்சினைகள், தத்துவங்களைப் பற்றி மீண்டும் பரிசீலனை** என்று தான்எழுதிய நூலை லி டா-சாவ் வெளியிட்டார்; அதில், "மார்க்சிசம் விரிந்து பரவி செல்வாக்குப் பெற்றுவருவது குறிப்பிடத்தக்க ஒரு சம்பவம்" என்று எடுத்துக்காட்டி, ஹூ ஷீ யின் குதர்க்கப் போக்கை அம்பலப்படுத்தினர்; பிரச்சினைகளைப்பற்றி ஆராய்வதில், சரியான முறைகளைக் கைக்கொள்ளாமலோ, அவற்றின் தத்துவங்களை ஆதாரமாகக் கொள்ளாமலோ தனித்து எதுவும் செய்ய முடியாது என்றும் அவர் எடுத்துக் காட்டினர், தோல்வியை ஒப்புகொள்ளத் தயாரா யில் லாத ஹூ ஷீ, "புதிய சிந்தனையின் அர்த்தம்" என்று மற்றொரு கட்டுரையையும் பிரசுரித்தார்; அதில், "சிறு சிறு அளவில் சீர்திருத்தம்" செய்வதற்கும், "பிரச்சினை களுக்கு சில்லறையான பரிகாரம்" தேடுவதற்கும், தனது ஆதரவைக் காட்டினர்; அத்துடன் மார்க்சிசத்திற்கு அவரது எதிர்ப்பையும், சமூகத்தை முழுவதுமே மாற்றி யமைக்க வேண்டுமென்பதற்கு அவரது எதிர்ப்பையும் அவர் வெளியிட்டார். அதன் பின்னர், அதற்கு மேலும் அவர் ஒருபடி முன்சென்று, "நல்லவர்களால் நடத்தப்படும் சர்க்கார்", "சீனாவின் புராதனக் கல்வி ஆராய்ச்சி" ஆகிய

வைபற்றி எடுத்துரைத்தார். இவ்வாருக, அன்றிருந்த பூர்ஷ்வா படிப்பாளிகளில் பெரும்பாலோர், "எதிரியுடன் பேரம் செய்துகொண்டு பிற்போக்கின் பக்கம் சேர்ந்து நின்றனர்" (புதிய ஜனநாயகம்)

இந்த விஷயத்தை, "கட்சிப் பதங்களை ஜபிக்கும் போக்கை எதிர்த்திடுக" என்று மா சே-துங் எழுதிய கட்டுரையில் தொகுத்துக் கூறியதாவது :

"மே 4ம் தேதி இயக்கம், அது வளர்ச்சியடைந்துவந்த போது, இரண்டு போக்குகளாகப் பிரிந்தது. ஒரு போக்கு, மே 4-ம் தேதி இயக்கத்தின் விஞ்ஞான, ஜனநாயக உணர்வை ஏற்றுக்கொண்டு, மார்ச்சிசத்தின் அடிப்படையில் புதிய வடிவம் கொடுத்தது. இந்தப் பணியை கம்யூனிஸ்ட்களும், கட்சியைச் சேராத சில மார்க்சிஸ்ட்களும் செய்ய முனைந்தனர். மற்ருெரு போக்கு, பூர்ஷ்வாக்களின் பாதையை ஏற்று வலதுசாரியினரைக் கொண்டதாக ஆனது. அதுதான் உருவவாதத்தின் வலதுசாரி வளர்ச்சியாகும்"

சின் மின் சங்கமும் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தது; வலதுசாரி, இடதுசாரி என்று பிரிந்தது. சிறுபான்மையோர் நம்பிக்கையிழந்து தங்கள் சொந்த வழியில் நடக்க ஆரம்பித்தனர். பெரும்பான்மையான அங்கத்தினர்கள், என்றும் போல் உற்சாகமும் நம்பிக்கையும் நிறைந்த முற்போக்குவாதிகளாகவே, மா சே-துங் உதாரணத்தையும், வழிகாட்டுதலையும் பின்பற்றி, சமூக, அரசியல், பொருளாதார, கலாச்சார முறையில் பரிபூரண மாறுதல் வேண்டுமென்ற கோரிக்கையை விடாது வற்புறுத்திவந்தனர்.

ஒரு முறையில் பார்த்தால், மே 4-ம் தேதி இயக்கமே தோல்வி யடைந்துவிட்டது என்று கூறலாம். தொழிலாளர்களை, விவசாய மக்களைச் சேர்த்துக் கொள்ளும் அளவுக்கு அந்த இயக்கம் போதியஅளவு விரிவடையவில்லை யென்பதுதான் அது தோற்றதற்குப் பிரதான காரணமாகும். பல தொழிலாளர்கள் அந்த இயக்கத்தில் கலந்து கொண்டார்கள் என்ருலும், போதிய அளவு சேரவில்லை. "தொழிலாளர், விவசாய மக்களோடு படிப்பாளிகளும் ஒன்றுபடவில்லையென்ருல், அவர்கள் எதையுமே சாதிக்க முடியாது"

(''மே 4-ம் தேதி இயக்கத்தைப் மற்றி'') ஆனல் அது பல காரியங் களை சாதித்தது.

'' சித்தாந்த ரீதியிலும், ஊழியர்கள் சம்பந்தமாகவும், 1921-ல் சீன கம்யூனிஸ்ட் கட்சியை ஸ்தாபிக்கவும், மே 30-ம் தேதி இயக்கத்தையும், வடபிராந்திய பிர யாணத்தை ஏற்பாடு செய்வதற்கும் மே 4-ம் தேதி இயக்கம் வழி வகுத்துக் கொடுத்தது.''

(புதிய ஜனநாயகம்)

* * *

சுமார் 400 ஹூனன் மாணவர்களும், முற்போக்கும், எந்தவிதமான கஷ்ட நஷ்டத்தையும் சமாளிக்கத் துணி வும் கொண்ட கல்வித் துறையில் சம்பந்தப்பட்ட சில திறமையான ஊழியர்களும்—அதாவது சூ-டே-லி போன்ற வர்களும், பிரான்சுக்குச் செல்லப் புறப்பட்ட 3000 பேர் களில் இருந்தனர். ஷாங்கையிலிருந்து கோஷ்டி கோஷ்டி யாக அவர்கள் புறப்பட்டனர். அப்பொழுது 1920-ம் ஆண்டு கோடைக்காலம்; அந்த சமயந்தான் இரண்டாவது தடவையாக மா சே-துங், ஷாங்கை வந்து சேர்ந்து. '' சாங் (சிங்-யாவ்)கை வெளியே விரட்டும் '' ஹூனன் மக்கள் இயக்கத்தையும், தேச வியாபகமான தனிக்காட்டு ராஜாக் கள்—எதிர்ப்பு இயக்கத்தையும் ஏற்பாடு செய்ய முனைந் தார். ஹூனனைச் சேர்ந்த சுய-உதவிமாணவர்கள் குழுவில் ஒன்று பிரான்சுக்குப் கப்பலேறப் போவதால், அவர்களை வழியனுப்ப மா சே-துங் கப்பலடிக்குப் போனர். வாங்பூ நதியின் வெள்ளி அலைகளிலே சூரிய ஒளிபட்டு மின்னியது. தங்கள் தாய்நாட்டைவிட்டுக் கப்பலேறுபவர்களும், வழி யனுப்புக்கூற வந்திருந்தவர்களும் சோகம் நிறைந்து காணப் பட்டனர். இருசாராரும் தங்கள் தலைகளை நிமிர்த்திப் பார்க்க முடியாது நின்றனர். ஆனல் ஒருவரை யொருவர் உற்றுப் பார்த்துக்கொண்டே அவர்கள் நெடுநேரம் நின்றனர். கப்பல் புறப்பட இன்னும் சிறிது நேரமிருக்கிறது. ஒரு லேசான நீல அங்கியை அணிந்திருந்த மா சே-துங் கப்பல் தளத்தில் நின்றுகொண்டிருந்தவர்களை நோக்கி கையை அசைத்தார், அதன்பிறகு, கப்பல் நங்கூரம் தூக்கிப்

புறப்படும்வரை காத்திராமல், அங்கிருந்து திரும்பி கப்பல் தளத்திலிருந்து மேலே சென்றுவிட்டார். இரைச்சலும், ஜனசந்தடியும் நிறைந்த கூட்டத்தின் நடுவே அவர் சென்று கலந்துவிட்டார்.

அதிலிருந்து, நீண்ட காலமாக வேதனையனுபவித்து வந்த சீன தேசத்தோடும், சீன மக்களோடும் அவர் இணை பிரியாது இருந்துவந்துள்ளார். அவரது பலதரப்பட்ட புரட்சி நடவடிக்கைகளை-கம்யூனிஸ்ட் புரட்சி நடவடிக்கை களை-மேலும் மேலும் பெருக்குவதிலேயே அவர் கண்ணுங் கருத்துமாக நின்றார்; அவரது பாலிய காலந்தொட்டு அவர் தேர்ந்தெடுத்த கடமையையும், நோக்கத்தையும்-அதாவது நாட்டையும், மக்களையும் விடுதலை செய்வதை நொடிப் பொழுதுங் கைவிடாமல் நின்றார்.

பழைய சமூக முறை, நிலப்பிரபுத்துவம், ஏகாதிபத் தியம் ஆகியவற்றை எதிர்த்துநிற்கும் குழப்பமில்லாத தேசிய ஜனநாயகவாதியாயிருந்து, தீவிர புரட்சிகர ஜன நாயகவாதியாக மாறி, அதன்பிறகு, தொழிலாளி வர்க்க சித்தாந்தத்தில் ஊறி வளர்ந்து, விஞ்ஞான சோஷலிஸ்ட் டாக மா சே-துங் மலர்ந்தார்; மார்க்சிச-லெனினிச தத்துவப் பேராயுத மணிந்து, சீனப் புரட்சிப் போராட்ட அனுபவத் தில் தேறி, சீனத் தொழிலாளி வர்க்கத்துக்கும், சகல பாட் டாளி மக்களுக்கும் தேசிய, சமூக விடுதலை நல்கும் பணி யில் உணர்ச்சி பூர்வமாகவும், நம்பிக்கையோடும் தன்னை முழுவதும் அர்ப்பணித்து, மக்களின் லட்சிய சேவையில் முழு மூச்சாக மா சே-துங் தன்னை ஈடுபடுத்தி நின்றார்.

———

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 20 | கொடுப்பார்கன் | கொடுப்பார்கள் |
| 8 | 7 | அணிந்தார் | அணிவித்தார் |
| ,, | 29 | பறித்தார். | பறித்தார் |
| 10 | 3 | வாத்தியார்களுக் | வாத்தியார்களுக்குத் |
| ,, | 7 | யுபே பே | யுயே பே |
| ,, | 15 | ஞுபகம் | ஞாபகம் |
| ,, | 17 | படித்தவற்ருல் | படித்தவை |
| ,, | 18 | பிரயோஜன மாயிருந்தது | பிரயோஜன மாயிருந்தன |
| 12 | 16 | அக்கரை | அக்கறை |
| 14 | 3 | ,, | ,, |
| 14 | 26 | தகர்ந்தது, | தகர்ந்தது. |
| ,, | 32 | மற்றும் வழிகளா லும் | மற்றும் பல வழிகளா லும் |
| 16 | 13 | கைகலந்தார், | கைகலந்தார். |
| 19 | 34 | வீல்லே | வில்லே |
| 21 | 2 | தூண்டாடும் | துண்டாடும் |
| 22 | 31 | பெரும்பாலனவர் கள் | பெரும்பாலானவர்கள் |
| 23 | 2 | நாகரீகமான | நாகரிகமான |
| ,, | 6 | தானிருந்தது | தானிருந்தன |
| 27 | 22 | சுங் | கங் |
| 30 | 15 | புரட்சிப்பணிபுரிய | புரட்சிப்பணிபுரிய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 39 | 16 | எள்று | என்று |
| 47 | 31 | 70 | 69-ம் |
| 52 | 13 | எள்னென்று | என்னென்று |
| 53 | 8 | ஒன்றும் | என்றும் |
| 60 | 20 | அவர்கள் | அவர்கள். |
| ,, | 30 | 19 | 20 |
| 62 | 34 | ஸ்தானத்தை | ஸ்தாபனத்தை |
| 63 | 16 | பள்ளிக்கூட | பள்ளிக்கூடம் |

